# பொருளடக்கம்

# 1. காது குத்துவது பெண்களை அடிமைப்படுத்தும் சடங்கே!

இந்தக் காதணிவிழாவில் வந்து நான் கலந்து கொள்வது, இதன் மூலம் நம் கருத்தினைச் சொல்லலாம் என்பதற்காகத்தானே தவிர, இது சரியானது என்பதால் அல்ல. இக்காரியம் முட்டாள்தனமானது தான். கொஞ்சம் நாளானால் தானாகவே மறைந்து விடும். பல பழக்க வழக்கங்கள் நம்மிடையே மறைந்து போகவில்லையா, அதுபோன்று இதுவும் மறைந்து விடும்.

உண்மையான தத்துவம் தம் தாய்மார்கள் தெரிந்து கொள்ள வேண்டும். பெண்களை ஆண்களுக்கு அடிமையாக்கப் பலவிதச் சடங்குகளைச் செய்கின்றனர். அவற்றில் ஒன்று தான் இந்தக் காது குத்துவதுமாகும். இந்த நகைகள் - ஓட்டைகள் எல்லாம் எதற்காக என்றால், கொஞ்சம் வலுவான பெண்கள் ஆண்கள் (தங்கள் கணவன்) அடிக்கும் போது எங்கே திருப்பி அடித்து விடுவார் களோ என்று, ஆண்கள் அவர்கள் திரும்ப அடிக்காமல் முதுகைக் காட்டும்படிச் செய்வதற்காகவே இவை யாவும், காதிலும், மூக்கிலும் ஓட்டையைப் போட்டு நகையை மாட்டினால் ஆண் அடிக்கப் போனால் பெண் தன் முகத்தையும், காதையும் பொத்திக் கொண்டு முதுகைக் காட்டுவாள். அதற்குத் தான் இந்த நகைகள் பயன்படுகின்றன. ரொம்ப பேர் எங்கள் பக்கங்களில் சம்மதிப்பது கிடையாது.

தாய்மார்கள் பிள்ளைகளை நல்லா படிக்க வைக்க வேண்டும். நல்லவர்களோடு பழக விட வேண்டும். முன்பு உறை போட்டுக் கொண்டிருந்த துலுக்கப் பெண்கள் இப்போது பனியன்கள் போட்டு குஸ்திச் சண்டைக்கு வருகின்றார்கள். வெள்ளைக்காரப் பெண்களும் சமமாகப் பழகுகின்றனர். அதுபோல நம் பெண்களும் ஆண்களோடு எல்லாக் காரியங்களிலும் சரிநிகராகப் போட்டிப் போட வேண்டும். சமுதாயத்தில் பாதி அளவு இருக்கும் பெண்கள் தங்கள் அடிமைத் தன்மையால் சமுகத்திற்குப் பயன்படாமல் போய் விடுகின்றார்கள். அவர்கள் விடுதலை பெற்றால் தான் நம்நாடு முன்னேற்றமடைய முடியும். சமுதாயம் முன்னேற்றமடைய முடியும் என்பதால், நாங்கள் சமுதாயச் சீர்திருத்தம் செய்யக் கூடியவர்களானதால் இதையெல்லாம்

எடுத்துச் சொல்லி மக்கள் திருந்த வேண்டுமென்று பாடுபடுகின்றோம்.

16.06.1968 அன்பரசி காதணி விழா உரை- விடுதலை 07.07.1968

# 2. பெண்கள் முடியைக் கத்தரித்துக் கொள்ள வேண்டும்

நம் மக்கள் ஆரிய மாயையில் சிக்கி இருந்தபோது ஏற்பாடு செய்யப்பட்டதுதான் இத்திருமண முறை என்பதாகும். இம்முறை மூன்று காரியங்களை அடிப்படையாக வைத்து நம்மிடையே புகுத்தப்பட்டதாகும். பெண்ணடிமை, மூடநம்பிக்கை, ஜாதி இழிவு ஆகிய மூன்று காரியங்களே அவையாகும்.

இம்மூன்றையும் ஒழிக்க வேண்டுமென்று இந்த நாட்டில் யாருமே பாடுபட முன்வரவில்லை. தோன்றிய மகான்கள், மகாத்மாக்கள், தெய்வீக சக்தி பொருந்தியவர்கள் எல்லாம் மனிதனின் மானமற்ற தன்மை, மூடநம்பிக்கை, ஜாதி இழிவு ஆகியவற்றைப் பற்றி சிறிதும் கவலைப்படவில்லை என்பதோடு, இவற்றை நிலைநிறுத்தவே பாடுபட்டு வந்திருக்கின்றார்கள்.

சுமார் 30 ஆண்டு காலத்திற்குமுன் தொடங்கப்பட்ட சுயமரியாதை இயக்கமானது மனித சமுதாய மடமையையும், ஜாதி இழிவையும், பெண்ணடிமையையும் ஒழிப்பதைக் கொள்கை யாகக் கொண்டு பாடுபட்டு வருவது. ஆகையால், இவற்றை நிலைநிறுத்தும் வகையில் அமைக்கப்பட்டிருந்த பழைய திருமண முறையினை மாற்றியமைக்க வேண்டியதாயிற்று.

நமது நாட்டில் மொத்த ஜனத்தொகையில் சரி பகுதியாக இருக்கிற பெண்கள், மனித சமுதாயத்திற்குப் பயன்படாமல் ஆண்களுக்கு அடிமையாகிப் பிள்ளை பெறுவதையும், அதைக் காப்பதையுமே கடமையாகக் கொண்டிருக்கிறார்கள். உலகில் பல இடங்களில் தற்போது பெண்ணடிமை நீங்கி வருகின்றது.

எனக்கு இப்பெண்ணடிமையை நீக்க, திருமண முறையையே நீக்கவேண்டும், சட்ட விரோதமாக்க வேண்டும் என்று கருதத் தோன்றுகின்றது. நம்நாட்டில் அடிமைமுறை இருந்தது, பெண்களை விற்கும் முறை, உடன்கட்டை ஏறும் முறை, குழந்தை களைப் பலியிடும் முறை போன்ற அனேகக் கொடுமைகள் இருந்தன. வெள்ளைக்காரன்

ஆட்சியின் போது இக்கொடுமைகள் யாவும் சட்டத்தின் மூலம் தடை செய்யப்பட்டன.

அதன் பின்னும் வெள்ளையன் ஆட்சியின் போது பெண்களுக்குச் சொத்துரிமை கிடையாது. பால்ய விவாகம் என்கின்ற மணமுறை, கணவன் பிடிக்காமல் பிரிந்து சென்றால் ஜீவனாம்சம் என்கிற பெயரால் மிகச் சிறிய தொகை கொடுக்கப்பட்டு வந்தது. நமது இயக்கம் தோன்றிய பின்தான் இவையெல்லாம் நம் போராட்டத்தின் காரணமாகச் சிறிது சிறிதாக மாற்றியமைக்கும்படிச் செய்தோம்.

நமது நாட்டு இலக்கியங்கள், தோன்றிய பெரியவர்கள், அறிவாளிகள் என்பவர் யாவரும் பெண்கள் அடிமைகளாக இருக்கவேண்டும் என்று சொன்னார்களே ஒழிய, பெண்கள் சுதந்திரத்தோடு வாழ வேண்டுமென்று எவருமே சொல்லவில்லை.

வள்ளுவனைச் சொந்த புத்தியுள்ளவன் என்பார்கள். அவனும் ஒரு சில இடங்களில் பார்ப்பன புத்தி கொண்டவனே யாவான். அவன் பெண்களை அடிமையாகவே இருக்க வேண்டுமென்றுதான் சொல்கின்றான். நம் பெண்கள் பகுத்தறிவு பெற்றிருந்தால் இப்போதிருப்பது போல் இரண்டு மடங்கு வளர்ச்சியினை இந்நாடு அடைந்திருக்கும்.

பெண்கள் குறைந்தது 20 வயதுவரைப் படிக்கவேண்டும். கோவில்களுக்குச் செல்லக் கூடாது. உத்தியோகங்களுக்குச் செல்ல வேண்டும். அல்லது ஏதாவது தொழில் செய்ய வேண்டும். மேல் நாட்டில் பெண்கள் சுதந்திரமாக வாழ்கின்றார்கள். உத்தியோகத் திற்குச் செல்பவர்களைத் தவிர மற்ற பெண்கள் வீட்டில் சும்மா இருப்பதில்லை. ஏதாவது கைத்தொழில் செய்து அதன்மூலம் தங்கள் வாழ்விற்குரிய வருவாயைத் தேடிக் கொள்கிறார்கள்.

நான் பல நாடுகளுக்குச் சென்றிருக்கிறேன். அங்கு உள்ள பெண்கள் சிங்காரித்துக் கொள்வது கிடையாது. லுங்கி கட்டிக் கொள்கிறார்கள். மேலே சட்டை போட்டுக் கொள்கிறார்கள். மக்கள் யாவருடனும் கலந்து பழகுகிறார்கள். தன் கணவனைப் பிடிக்கவில்லையென்றால், வேறு பிடித்த ஆணோடு சென்று விடுவார்கள். அங்கு அது குற்றமாகக் கருதப்படுவது கிடையாது.

இளம் வயதில் பெண்களுக்குத் திருமணம் செய்வதால் அவர்களுக்கு உலக அறிவு வளர முடியாமல் போய்விட்டது. இதற்கு முன் இருந்தவர்கள் எல்லாம் பழைமையைப் பற்றிச் சொல்லிவிட்டுப் போனார்களே ஒழிய, கோவிலைக் கட்டி மக்களை மடையர்களாக்கிப் போனார்களே ஒழிய, மனிதனுக்கு அறிவு இருக்கிறது, அதைக் கொண்டு சிந்தித்து அதன்படி நட என்று எவனும் சொல்லவில்லை. உலக வளர்ச்சியில் நம் நாட்டு மக்களுக்கு ஒரு சிறு பங்குகூட இல்லையே!

கல்லையும், செம்பையும் உருவமாக்கி, கடவுளாக்கி அவற்றை வணங்கும்படியாகச் செய்து, திருவிழா, உற்சவம் என்று நடத்தி மக்களை மடையர்களாக்கினரே ஒழிய, அறிவுப்படி நட என்று எவனுமே சொல்லவில்லை. காரணம் தெரியாத - சமாதானம் சொல்ல முடியாத காரியங்களை மனிதன் கைவிட வேண்டும்.

நாம் வளர்ச்சியடைய வேண்டும். நம் அறிவை வளர்த்துக் கொள்ள வேண்டும். நம் மக்கள் அறிவு வளர்ச்சி பெற முடியாமல் போனதற்குக் காரணமே கடவுள், மதம், சாஸ்திரம் ஆகியவற்றா லேயேயாகும். இவற்றையெல்லாம் மாற்றினால் நம் மக்களின் அறிவு வளர்ச்சியடையும். மற்ற மக்களுக்கு நம் அறிவு பயன்படும்; நம் அறிவிற்கு அவ்வளவு சக்தியுண்டு.

இறுதியாக, மணமக்கள் வாழ்வில் சிக்கனமாக வாழ வேண்டும். ஆடம்பரமாக வாழக் கூடாது. பெண்கள் முடியைக் கத்தரித்துக் கொள்ளவேண்டும். லுங்கி அணியவேண்டும், சட்டையணிந்து கொள்ளவேண்டும். நகை அணியக் கூடாது. வரவிற்குள் செலவிட்டுப் பழக வேண்டும். கூடுமானவரை குழந்தை பெறுவதைக் குறைத்துக் கொள்ள வேண்டும். ஒன்று மிஞ்சினால் இரண்டு. அதோடு நிறுத்திக் கொள்ளவேண்டும்.

- 11.04.1971 அறந்தாங்கி திருமண விழா உரை, விடுதலை 10.06.1971

# 3. நகை அணிவதுதான் அழகா?

பெண்கள் முன்னேற்றம் என்றால், ஆண்களைப் போன்ற எல்லா உரிமைகளும் வசதிகளும் பெற்றிருப்பதுதான். "நள்ளிரவில் அழகான ஒரு சிறு பெண் தன்னந்தனியே சில மைல்கள் நடந்து செல்லக்கூடிய சமூக அமைப்பு ஏற்பட்டா லொழிய நம் நாட்டில் நாகரிகம் வளர்ந்திருக்கிறது என்பதை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன்." என்று காந்தியார் எழுதியிருப்பதாக நமக்கு நினைவிருக்கிறது. இன்று படிப்பும் நாகரிகமும் வளர வளர, பெண்களின் உரிமை குறைந்து கொண்டு தானிருக்கிறது. இதற்கு ஆண்களின் தீய நடத்தை மட்டுமே காரணமல்ல. பெண்களின் தவறான வாழ்க்கை இலட்சியமும் ஒரு காரணமாகும்.

"படித்த பெண்களும், பட்டதாரிப் பெண்களும், பணம் படைத்தவர் வீட்டுப் பெண்களும் மனித சமுதாயத்துக்காகப் பணியாற்றுவதே கிடையாது. மோட்டார் கார், நகை நட்டுகள், உயர்தர உடைகள், உல்லாசப் பொழுதுபோக்கு, (சினிமா, நாடகம், இசைவிழா, அரட்டைக் கச்சேரி போன்றவை) ஆகிய ஆசை களைத் தவிர இவர்களுக்கு வாழ்க்கை இலட்சியம் என்பதே பெரும்பாலும் இருப்பதில்லை."

கொத்துக் கொத்தாக நகை அணியும் பித்து நம்குலப் பெண்களை அட்டைபோல் ஒட்டிக்கொண்டிருக்கிறது. அளவுக்கு மிஞ்சி நகையணிவதைத்தான் நான் இங்குக் குறிப்பிடுகிறேன். ஓரளவு நகைகளுக்கு மேல் அணிகிறவர்களுக்குத் தண்டனை அல்லது வரி விதிக்கச் சட்டமியற்றும் சர்க்காரை நான் வரவேற்கிறேன். நகை அணிவதால் உயிருக்கே ஆபத்து நேரிடுவதும் உண்டு. ஆடைகளுக்கென்று அபரிமிதமாகப் பணத்தை அள்ளி இறைத்து வாழ்க்கையில் அல்லலுறும் நம் குலத்தவரை எண்ணியும் இரங்குகிறேன்.

கைத்தறித் துணிகளை நாம் கட்டிக் கொண்டால், கைத்தறி நெசவாளரின் துயரத்தைப் போக்குவதுடன், வேலையில்லாத் திண்டாட்டத்தையும் குறைக்க முடியும் என்று சென்னையில்

நடைபெற்ற நாடார் மகாசன சங்க 23 ஆவது மாநாட்டிற்குத் தலைமை தாங்கிய உயர் திருவாளர் நாகர்கோவில் டாக்டர் ஜான் ஹிலக்கையா அவர்கள் எடுத்துக் காட்டியிருப்பதை வரவேற்கிறோம். அறிவுரையைப் பாராட்டுகிறோம்.

நாடார் குலப் பெண்களைக் குறித்துக் காட்டும் இவர் இப்படிக் கூறியுள்ளாரெனினும், செல்வர் வீட்டுப் பெண்களுக்கும் இக்கூற்றுப் பொருந்தியதாகும். இத்துறையில் கடந்த 30 ஆண்டு களாகப் பிரச்சாரம் செய்து வருகின்ற சுயமரியாதை இயக்கம் ஓரளவு உணர்ச்சியூட்டியிருக்கிறது. காந்தியார் அவர்களின் பிரச்சாரமும் ஓரளவு வெற்றி தந்திருக்கிறது. என்றாலும் இந்த நகைப் பித்தும் உயர் தரமான உடைப்பித்தும் பணம் படைத்த வீட்டுப் பெண்களைக் கடுமையாகப் பற்றிக் கொண்டிருக்கிறது.

இவள் இன்னார் மகள் அல்லது இன்னார் மனைவி, இவ்வளவு சொத்துக்குச் சொந்தக்காரி என்று பிறர் கூறிப் புகழ வேண்டும் என்பதற்காகவே அலங்காரப் பதுமைகளைப் போல் **5000, 10,000** ரூபாய்க்கு மேற்பட்ட உடைகளைச் சுமந்துகொண்டு திரிகின்றார்களேயல்லாது, இவள் இன்ன தொழில் நிபுணத்துவம் பெற்றவள்! இவள் இந்தத் துறையில் திறமைசாலி என்ற பெயர் வாங்கவேண்டுமென்ற எண்ணமோ இத்தகைய பெண்களுக்கும் இருப்பதில்லை.

பணத்தைச் சேமித்துப் பத்திரப்படுத்த முடியாத பழங் காலத்தில் நம் பெண்கள் நடமாடும் பாங்குகளாகவும், இரும்புப் பெட்டிகளாகவும் பயன்படுத்தப்பட்டனர். ஆனால், பணத்தைச் சேமிக்கக்கூடிய பல நூறு துறைகள் பெருகிக் கிடக்கின்ற இந்தக் காலத்தில் இது அவசியமா என்பதைப் பணம் படைத்த வீட்டுப் பெண்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

நகையணிவதுதான்அழகு என்றால், நகையணியாத ஆண்கள் அழகாயில்லையா? நகை என்பது பெண்களின் உரிமைக்குப் பூட்டப்பட்டிருக்கின்ற பவுன்விலங்கு என்பதைப் பெண் இனம் மறக்கக் கூடாது. நகைகளிலும், உயர்தரமான உடைகளிலும் பாழாக்கப்படுகின்ற பணம், குடும்பத்துக்கோ, சமுதாயத்துக்கோ பயன்படாமல் வீணாகிறது.

இதை எப்படித் தடுக்க முடியும்? திரு. ஹிலக்கையா அவர்கள் கூறியிருப்பதுபோல் தண்டனையோ வரியோ விதித்தாக முடியாது. தண்டனையை அனுபவித்து விடுவார்கள். குடி வெறியர்கள் இன்று துணிந்திருப்பதுபோல வரியையும் கொடுத்து விடுவார்கள், பணம் படைத்தவர்களாதலால்.

ஒருக்கால் நகையைப் பறிமுதல் செய்வது என்ற மாதிரியான சர்வாதிகார உத்தரவு பிறப்பிக்கப்பட்டால்தான் முடியும். ஜனநாயக முறைகளால் இப்பேர்ப்பட்ட சமுதாய வெறிக் குணங்களை ஒழிக்க முடியாது. ‘அளவுக்கு மீறிய நகை’ என்ற பாதுகாப்பு இருக்கக்கூடாது.

மக்களிடையே அறிவு பரவுவதன் மூலமேதான் இந்த மனப்பான்மை அடியோடு மாறவேண்டும். நெற்றியில் நாமமோ விபூதியோ அடித்துக் கொண்டு வருகின்ற பள்ளிச் சிறுவனைக் கண்டால், உற்ற பள்ளிச் சிறுவர்கள் எவ்வாறு கைதட்டி நகைத்துக் கேலி செய்கிறார்களோ அதுபோல, நடமாடும் நகை அலமாரி களாகக் காட்சியளிக்கின்ற பெண்களைக் கண்டு (பைத்தியக் காரரைச் செய்வதுபோல்) மற்ற பெண்கள் கைதட்டிக் கேலி செய்யக் கூடிய நிலைமை தமிழர் சமுதாயத்தில் ஏற்பட வேண்டும்.

படித்த பெண்களும், பட்டதாரிப் பெண்களும், பணக்காரர் வீட்டுப் பெண்களுமே இத்துறையில் மற்ற நகைப்பித்துப் பெண்களுக்கு நல்வழி காட்டக்கூடியவர்களாக விளங்க வேண்டும்.

எந்த நாட்டையும் பீடிக்காத இந்த நகைப் பித்துப் பீடை தமிழ்நாட்டைப் பிடித்திருக்கிறது. பணம் படைத்த ஒரு சிலரைப் பார்த்து, நடுத்தரக் குடும்பப் பெண்களும் நகைப்பித்துப் பிடித்தவர்களாகி விடுகிறார்கள். இதனால் சச்சரவும், திருமணத் தடைகளும் பெண் இனம் துணையில்லாது வெளிச் செல்ல முடியாத வேதனை நிலையும் ஏற்பட்டிருப்பதைத் தவிர நன்மை ஏதாவது உண்டா? பெற்றோர்களும் பெண்களும் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

# 4.பெண்கள் அலங்காரப் பொம்மைகளா?

மதிப்பிற்குரிய தலைவர்களே! மணமக்களே! பெற்றோர்களே! தாய்மார்களே! தோழர்களே!

சம்பத் - சுலோசனா திருமண நிகழ்ச்சியைக் கண்டு களித்தீர்கள். தலைவர் அவர்கள், தோழர்கள் - டி. ஷண்முகம், அன்பழகன் ஆகியவர்களின் சொற்பொழிவைக் கேட்டீர்கள். நானும் சிறிது பேச வேண்டுமென்று நீங்கள் எதிர்பார்க்கக்கூடும். நான் பேசுவது எதைப் பற்றி என்பது முக்கியப் பிரச்சனை; அரசியல் பற்றி இங்கு நான் பேசப் போவதில்லை. இது சமுதாய சம்பந்தமான ஒரு நிகழ்ச்சியைப்பற்றிய கூட்டம். இம்மாதிரி கூட்டங்களில் பெரும் பாலான மக்கள் பாட்டுக் கச்சேரி, புராணக் கதை, காலக்ஷேபம், நாட்டியம், நகைச்சுவை முதலியவற்றை வைத்து நேரத்தையும், பணத்தையும் வீணாக்குவார்கள்; அல்லது கேளிக்கை ஆக்குவார்கள். அவற்றின் பயனாய் நேரம், பணம் வீணாவதல்லாமல் மக்களுக்கு யாதொரு பயனும் விளையாது....

...இத்திருமண முறை புதியதாயிருப்பதால், அதைப்பற்றிப் பேசுவது பொருத்தமானதாக இருக்கலாம்; என்றாலும் பேச்சாக ஆகிவிட்டது. இம்முறை தொடங்கி 20-ஆண்டுகள் ஆகின்ற தாலும், பல ஆயிரக்கணக்கான செல்வர், வறியர், புலவர், பாமரர், துறந்தார் ஆகிய எல்லா மக்களிடையும் புகுந்து தானாக வளர்ந்து வருவதாலும், இதுபற்றிப் பேச வேறு அநேகர் இருக்கிறபடி யாலும், இனியும் அதுவும் இப்பேர்ப்பட்ட அறிஞர் குழுவுக்கு நான் இதையே பேச வேண்டியது அவ்வளவு தேவை என்று கருதவில்லை. நம் சமுதாயத்துறையில் மாற்றங்காண வேண்டிய மற்றும் எவ்வளவோ காரியங்கள் இருப்பதால் அவற்றில் ஏதாவது ஒன்று பற்றிப் பேசலாம் என்று கருதுகிறேன். மாற்றம் என்பது இயற்கையாய் எல்லாத் துறையிலும் நடந்து வந்தாலும் நமக்கு அவசியம் வேண்டியதான மாற்றங்கள் பற்றிச் சிந்திக்க வேண்டியதும் அப்படிப்பட்ட மாற்றத்தில் ஈடுபட வேண்டியதும் அறிவுடைமையாகும்.

இத்திருமணத்தை அறிஞர் பிரின்ஸ்பால் இராமசாமி அவர்கள்

திராவிடத் திருமணம் என்றார். ஆம்; நாம் திராவிடர்தான்; ஆனால் இந்த முறையில்தான் திராவிடரின் பழங்காலத் திருமணம் நடந்ததென்றோ அல்லது இப்படியேதான் திராவிடர் எதிர்காலத்திலும் திருமணங்கள் நடத்த வேண்டுமென்றோ நான் முடிவு கட்டவில்லை. இது திராவிடர் திருமணம் என்றாலும், நான் இதை 1946-ஆம் வருஷத்திய (தற்கால நிலைமைக்கேற்ற திருமணம் என்றும், இதுவே இன்று உலக மக்கள் எல்லாம் திருமணமாக இருக்க வேண்டும் என்றும் சொல்லுகிறேன்.

ஆனால், இது மாறாமல் இப்படியே இருக்க வேண்டியது என்று சொல்லுவதில்லை. 1946-ஆம் வருஷத்தியது என்று நான் சொன்னதால் 1956-க்கும் இப்படியே இருக்க வேண்டுமென்பது கருத்தன்று. இந்த மாற்றம் நம் சவுகரியத்தையும், அறிவையும், மனிதத் தன்மையும், பொது நலத்தையும் குறிக்கொண்ட தன்மையாகும். இதனிலும் மேலான நலனுக்கும் தெளிவுபட்ட அறிவுக்கும் ஏற்றபடி நாளைக்கோ 1956-வருஷத்திலோ மாற்றம் ஏற்படலாம். அதைக் கூடாது என்று இந்த 46-ஆம் ஆண்டு திருமண முறை சொல்லாது.

1912 ஆம் ஆண்டில் ஏற்பட்ட போர்ட் மோட்டார் கார் முறை (அமைப்பு) 1946 இல் இல்லை. இன்று வேறு மாதிரி ஆகிவிட்டது. இதுவும் 1947 இல் இருக்காது. மாற்றமடைந்தே தீரும். இந்த மாற்றம் எல்லா அறிவு, சவுகரியம், மாத்திரமல்லாமல், சமுதாய அமைப்பு, அரசியல் சட்டம், பொருளாதார உரிமை, சுத்த சுதந்திரம் ஆகியவற்றையும் அடிப்படையாகக் கொண்டதாதலால் அவற்றிற்கு ஏற்றவண்ணம் அது மாறுதலடைந்துதான் தீரும்.

திருமணம் தேவையா? ஒப்பந்தம் தேவையா? என்பது கூட சிந்தனைக்கு விருந்தாக ஆகிவிடலாம். ஆகவே வரப்போகிற காலம் ஆராய்ச்சி, பகுத்தறிவு, சர்வதுறையிலும் சமசுதந்திர வேட்கைக் காலமாக இருக்குமாதலால், அதை இந்த மூடநம்பிக்கை பெரிது மாயும், பகுத்தறிவு சிறிதுமாயும் இருக்கிற காலத்தில் கட்டுப் படுத்துவது பயன்படாதென்று கருதி அதை இத்துடன் விட்டுவிட்டு வேறு விஷயம் பற்றிப் பேசலாம் என்று கருதுகின்றேன்.

அதாவது நம் பெண்மக்கள் பற்றி பெண்மக்களுக்கும், பெற்றோர்களுக்கும், அவர்களது கணவர் என்பவர்களுக்குமாகச் சிறிது பேச அவாக் கொள்ளுகிறேன். எல்லாத் துறையிலும்

எல்லார்களுக்குள்ளும் மாற்ற உணர்ச்சி ஏற்பட்டால் ஒழிய நம் நாட்டைப் போன்ற, நம் சமுதாயத்தைப் போன்ற தாழ்த்தப்பட்ட, அடிமையாக்கப்பட்ட நாட்டுக்கும், சமுதாயத்திற்கும் விமோசனம் இல்லை. ஆகையால், பெண்கள் பற்றி பேசுகிறேன்.

பெண்கள் மனித சமுதாயத்தில் சரி பகுதி எண்ணிக்கை கொண்டவர்கள். இரண்டோர் உறுப்பில் மாற்றம் அல்லாமல் மற்றபடி பெண்கள் மனித சமுதாயத்தில் ஆண்களுக்கு முழு ஒப்பு உவமையும் கொண்டவர்கள் ஆவார்கள் என்பேன்.

நாமும் அவர்களை சிசு, குழந்தைப் பருவமுதல் ஓடி விளையாடும் பருவம் வரையில் கொஞ்சி முத்தங்கள் கொடுத்து பலவிதத்திலும் பேத உணர்ச்சியே அற்று ஒன்றுபோலவே கருதி நடத்துகிறோம்; பழகுகிறோம். அப்படிப்பட்ட மனித ஜீவன்கள் அறிவும், பக்குவமும் அடைந்தவுடன் அவர்களைப்பற்றி இயற்கைக்கு மாறான கவலை கொண்டு மனித சமுதாயத்தில் வேறாக்கி, கடைசியாகப் பொம்மைகளாக்கிப் பயனற்ற ஜீவனாக மாத்திரமல்லாமல் அதைப் பெற்றோருக்கு ஒரு தொல்லையான பண்டமாக ஆக்கிக் கொண்டு அவர்களது வாழ்வில் அவர்களை அவர்களுக்கும், மற்றும் உள்ளவர்களுக்கும் கவலைப்படத்தக்க ஒரு சாதனமாய்ச் செய்து கொண்டு அவர்களைக் காப்பாற்றவும், திருப்திப்படுத்தவும், அலங்காரப்படுத்தி திருப்தியும், பெருமையும் அடையச் செய்ய வேண்டியதான ஒரு அஃறிணைப் பொருளாகவே ஆக்கி வருகிறோம்.

பெண்களால் வீட்டிற்கு, சமுதாயத்திற்குப் பலன் என்ன? என்று பாருங்கள். எங்கு கெட்ட பேர் வந்துவிடுகிறதோ என்பது தானே? இன்று பெண்கள் வேலை என்ன? ஒரு ஆணுக்கு ஒரு பெண்ணாய் அமைப்பது. அது எதற்கு? ஆணின் நலத்துக்குப் பயன்படுவதற்கும், ஆணின் திருப்திக்கும், ஆணின் பெருமைக்கும் ஒரு உபகருவி என்பதல்லாமல் வேறு என்ன? என்று சிந்தித்துப் பாருங்கள்.

ஒரு ஆணுக்கு ஒரு சமையல்காரி; ஒரு ஆணின் வீட்டிற்கு ஒரு வீட்டுக்காரி; ஒரு ஆணின் குடும்பப் பெருக்கிற்கு ஒரு பிள்ளை விளைவிக்கும் பண்ணை; ஒரு ஆணின் கண் அழகிற்கும், மனப்புளங்காகிதத்திற்கும் ஒரு அழகிய அலங்கரிக்கப்பட்ட பொம்மை என்பதல்லாமல் பெண்கள் பெரிதும் எதற்குப் பயன்படுகிறார்கள்?

பயன்படுத்தப்படு கிறார்கள் என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்.

இது என்ன நியாயம்? மனித சமுதாயம் தவிர மற்றபடி மிருகம், பட்டுப்பூச்சி, ஜந்து முதலியவைகளில் வேறு எந்த ஜீவனாவது ஆண்களுக்காகவே இருக்கிறோம் நாம் என்ற கருத்துடன், நடத்தையுடன் இருக்கிறதா என்று பாருங்கள்.

இந்த இழி நிலை பெண்களுக்கு அவமானமாய்த் தோன்ற வில்லை என்பதற்காகவே, ஆண்கள், பெண்களை இவ்வளவு அட்டூழியமாய் நடத்தலாமா? என்று கேட்கிறேன். ஒரு ஆண், ஒரு பெண்ணைத் தனது சொத்து என்று எண்ணுகிறானே எதனால்? துணியாலும், நகையாலும் தானே. பெரிதும் கம்பி இல்லாத தந்தியும், ரேடியோவும், அணுகுண்டும் கண்டுபிடிக்கப்பட்ட இந்தக் காலத்திலும் பெண்கள் அலங்கார பொம்மைகளாக இருப்பதா? என்று கேட்கிறேன்.

நான் சொல்லுவது இங்குள்ள பல ஆண்களுக்கும், ஏன் பெண்களுக்கும் கூட வெறுப்பாய், குறைவுமாய், சகிக்க முடியாத படியாய்த் தோன்றலாம் என்பது எனக்குத் தெரியும். இந்த வியாதி கடினமானது. தழை அடித்துப் பாடம், மந்திரம் போடுவதாலும், பூச்சுப்பூசி, பத்து போடுவதாலும், விலகக்கூடிய வியாதி அல்ல இது. கூர்மையான ஆயுதத்தால் ஆழம்பட அறுத்துக்கிளறி காரம் (எரிச்சல்) மருந்து போட்டு போக்கடிக்க வேண்டிய வியாதி. அழுத்திப் பிடித்து, கண்டித்து, அதட்டி அறுத்துத் தீர வேண்டியதாகும். நான் வெறும் அலங்காரப் பேச்சைத் தொண்டாகக் கொண்டவனல்ல. அவசியப்பட்ட வேலை நடக்க வேண்டும். என் ஆயுளும் இனி மிகமிகச் சொற்பம். இதையாவது செய்தாக வேண்டும். ஆதலால், கோபிக்காமல், ஆத்திரப்படாமல் சிந்தியுங்கள்.

நம் பெண்கள், உலகம் பெரிதும் மாற்றமடைய வேண்டும். நம் பெண்களைப் போல் பூமிக்குப் பாரமானவர்கள், மனிதனுக்குத் தொல்லையானவர்கள், நல்ல நாகரிகமான வேறு நாடுகளில் கிடையாது. இங்குப் படித்த பெண், படியாத பெண் எல்லோரும் பொம்மைகளாகவே இருக்கிறார்கள். அவர்கள் பெற்றோர்களும், கணவன்மார்களும் அவர்களது (பெண்களை) அழகிய பொம்மைத் தன்மையைக் கொண்டே திருப்தி அடைகிறார்கள். பெருமை அடைகிறார்கள். பெண்களைத் திருப்தி செய்ய, அவர்களை நல்ல

பெண்களாக ஆக்க, விலையுயர்ந்த நகையும், துணியும் கொடுத்து, அழகிய சிங்காரப் பதுமையாக்கி விட்டால் போதும் என்று நினைக்கிறார்கள்.

பெண்கள் பெருமை, வருணனை ஆகியவைகளில் பெண்கள் அங்கம், அவயவங்கள், சாயல் ஆகியவைகளைப் பற்றி அய்ம்பது வரி இருந்தால், அவர்களது அறிவு, அவர்களால் ஏற்படும் பயன், சக்தி, திறமைப்பற்றி ஒரு ஐந்து வரி கூட இருக்காது. பெண்களின் உருவை அலங்கரிப்பது, அழகை மெச்சுவது சாயலைப் புகழுவது ஆகியவை பெண்கள் சமுதாயத்திற்கு அவமானம், இழிவு, அடிமைத்தனம் என்பதை ஆயிரத்தில் ஒரு பெண்ணாவது உணர்ந்திருக்கிறது என்று சொல்ல முடியுமா என்று கேட்கிறேன்.

பெண்களுக்குத் தகப்பன் சொத்தில் உரிமை கிடையாதது ஏன் என்று எந்தப் பெண்ணாவது காரணம் கேட்டனரா? பெண்களை அனுபவிக்கிறவன், அவர்களிடம் வேலை வாங்கிப் பயன் அடைகிறவன் காப்பாற்றமாட்டானா என்பதுதான். அதற்கேற்ற நகை அணி ஆகியவையே போதும்.

அலங்காரம் ஏன்? மக்கள் கவனத்தை ஈர்க்கும்படியான நகை, துணி, மணி, ஆபரணம் ஏன்? என்று எந்தப் பெண்ணாவது பெற்றோராவது 'கட்டின'வராவது சிந்திக்கிறார்களா? பெண்கள் அஃறிணைப் பொருள் என்பதற்கு இதை விட வேறு என்ன ஆதாரம் வேண்டும்? தன்னை அலங்கரித்துக் கொண்டு மற்ற மக்கள் கவனத்தைத் தன் மீது திருப்புவது இழிவு என்றும், அநாகரிகம் என்றும் யாருக்கும் தோன்றாததற்குக் காரணம் அவர்கள் போகப் பொருள் என்ற கருத்தேயாகும். இது பரிதாபமாகவே இருக்கிறது.

நல்ல கற்புடை பெண்களுக்கு உதாரணம், "மற்றொருவர் உள்ளம் புகாள்" என்பது திராவிட மரபு நூல்களின் கூற்று. அதாவது ஒரு பெண் இயற்கையில் கற்புடையவளாயிருந்தால் தன் கணவன் தவிர மற்றவர்கள் நினைவுக்குக் கூட ஆளாகமாட்டாள். "பிறர் நெஞ்சுபுகாள்" என்பதாகும். நாம் நம் பெண்களை மற்றவர்கள் எப்படிப்பட்டவர்களானாலும், பல தடவை திரும்பித் திரும்பிப் பார்க்கும்படி அவர்கள் கவனத்தை நம்மீது திரும்பும்படி அலங்கரிக்கிறோம். அலங்கரிக்க அனுமதிக்கிறோம். அதில் நம் பணம்,

உழைப்பு, நம் வாழ்க்கைப் பயன் முதலியவற்றைச் செலவழிக்கிறோம். இது ஏன், ஏதற்காக என்று சிந்திக்காததால் அதைத் தவிர வேறு காரியத்திற்கு நம் பெண்கள் பயன்படாமல் போய்விட்டார்கள்.

நான் பாமர மக்களை மாத்திரம் சொல்லவில்லை. நம் அறிஞர், செல்வர், தனக்கென வாழாப் பிறர்க்குரியாளரானவர்கள் என்று சொல்லப்படும் பெரியோர்கள் யோக்கியதைகளையும், அவர்கள் பெண்கள் உலகத்துக்கு ஆற்றும் தொண்டுகளையுமே பற்றிச் சொல்லுகிறேன். சர். ஷண்முகம் செட்டியார், சர். குமார ராஜா முதலாகிய திராவிடப் பேரறிஞர் செல்வர்களின் மனைவிகள், தங்கை, தமக்கைகள், பெண்கள் எங்கே? எப்படிப் பிறந்தார்கள்? எப்படி வளர்ந்தார்கள்? எப்படித் தகுதி ஆக்கினார்கள்? எப்படி இருக்கிறார்கள்?

ஷாப்பு கடைகள், ஜவுளிக்கடைகள் ஆகியவற்றில் விளம்பரத்திற்கு வைத்திருக்கும் அழகிய பொம்மைகள் உருவங்கள் போலல்லாமல் நாட்டுக்கு, மனித சமுதாயத்திற்கு, பெண் உலகத்திற்கு இவர்கள் என்ன மாதிரியில் தொண்டாற்ற அல்லது தாங்களாவது ஒரு புகழோ, கீர்த்தியோ பெறத்தக்கபடி வைத்தார்களா? என்று கேட்கின்றேன். இவர்களே இப்படி யிருந்தால், மற்ற பாமர மக்கள் தங்கப் பெட்டியின் உள்ளே வெல்வெட் மெத்தை போட்டுப் பூட்டித்தானே வைப்பார்கள்.

ஒரு பீகம் அமீருதீன் அம்மையார் முஸ்லீம் கோஷா இனம். அவர்கள் எவ்வளவு தொண்டாற்றுகிறார்கள்? நம் பெண்கள் மாத்திரம் நகைகள் மாட்டும் ஸ்டாண்டா? என்று கேட்கின்றேன். இந்த பிரபல ஆண்கள் பிறந்த வயிற்றில் தான் இவர்கள் தங்கை தமக்கையர் பிறந்தார்கள். இவர்கள் தகப்பன்மார்கள் தான் அவர்களுக்கும் தகப்பன்மார்கள். அப்படி இருக்க இவர்களுக்கு இருக்கும் புத்தித் திறமை அவர்களுக்கு ஏன் இல்லாமல் போகும். இதைப் பயன்படுத்தாதது நாட்டுக்கு - சமூகத்திற்கு நட்டமா இல்லையா? என்று கேட்கிறேன். பெண்கள் படிப்பு என்பது சுத்த முட்டாள்தனமான முயற்சியாகவே பெரிதும் இருக்கிறது.

பெண்களைப் படிக்க வைப்பது வீண் பணச்செலவு; நாட்டு வரிப்பணத்தின் 'வீண்' என்று ஒரு சமயத்தில் ஈரோட்டில் மணியம்மை சொன்னது போல் உண்மையில் பெரிதும் வீணாகவே ஆகிறது.

கோபிக்காதீர்கள், இந்தக் கீழ் உதாரணத்தைக் கொண்டு ஒப்பிட்டுப் பாருங்கள்.

அதாவது ஒரு குடும்ப வாழ்க்கைப் பெண்ணுக்கு அவள் தாய் - தகப்பன், பாட்டு, பிடில், வீணை, நாட்டியம் கற்றுக் கொடுத்து அவற்றில் வெற்றியாய் தேற வைத்தான் என்று வைத்துக்கொள்ளுங்கள். (பலர் இதை இன்னும் செய்கிறார்கள்). அவளை ஒருவன் கையில் பிடித்துக் கொடுத்த பின்பு, அதாவது திருமணம் ஆன பின்பு அந்தப் பாட்டு, பிடில், வீணை யாருக்கு என்ன பயன் கொடுக்கிறது? என்று கேட்கிறேன். புகுந்த வீட்டில் சங்கீதம் பாடினால் “இது என்ன குடித்தன வீடா? வேறு வீடா?” என்று மாமி கேட்பாள். பிடில் வீணை தூசி அடையும்.

ஆகவே, இந்தப் படிப்பு நல்ல மாப்பிள்ளை சம்பாதிக்க ஒரு அட்வர்டைஸ்மென்ட்டாகப் (விளம்பரம்) பயன்பட்டது தவிர, மற்றபடி வீணாகப் போய்விட்டதல்லவா? செலவும் கண்டது தானே என்கிறேன்.

அதுபோல் ஒரு பெண்ணை ஒரு தாய், தகப்பன் பி.ஏ படிக்க வைத்து ஒருவன் கையில் பிடித்துக் கொடுத்து அந்தப் பெண் சமையல் செய்யவும், குழந்தை வளர்க்கவும், நகை, துணி, அலங்காரங்களுடன் மக்கள் கவனத்தை ஈர்க்கவும் செய்தால் பி.ஏ. படிக்க வைத்த பணம் வீண் என்பதோடு, அதற்காகச் சர்க்கார் செலவழித்த மக்கள் வரிப்பணமும் வீண்தானே? இது தேசிய குற்றமாகாதா?

நான் சில படித்த பெண்களைப் பார்க்கிறேன். வயிற்றில் ஒரு குழந்தை, கட்கத்தில் ஒரு குழந்தை, கையில் பிடித்துக் கொண்டு ஒரு குழந்தை. இவ்வளவோடு சிலருக்கு முன்னால் ஓடும்படி ஒரு குழந்தையை விட்டு இப்படியாக படைகளோடு நல்ல நிகழ்ச்சிகள் நடக்கும் வட்டங்களுக்கு வந்து நடுவிலிருந்து கொண்டு நிகழ்ச்சி களுக்கு இடையூறும், தொல்லையும் கொடுப்பதைப் பார்க்கிறேன். இது மனித சமூகத்தில் இருக்கத்தக்கதா?அதுவும் நாகரீக சமூகத்தில் படித்தப் பெண்கள், படித்தவர்கள் வீட்டுப் பெண்கள் என்கின்றவர்கள் இடையில் இருக்கத்தக்கதா? என்று கேட்கிறேன். இந்த லட்சணத்தில் நகைகள், விலை உயர்ந்த துணிகள்? குழந்தைகள் கூட்டத்தில் மலம், ஜலம் கழிக்கும், கத்தும் ஆபாசம் இவை ஏன்?

நகைக்கும், துணிக்கும் போடும் பணத்தை பாங்கில் போட்டு

குறைந்த வட்டியாவது வாங்கிக் குழந்தைப் பிறந்த உடன் அதை எடுத்து அந்த வட்டியில் ஒரு ஆள் வைத்தாவது அதைப் பார்த்துக் கொள்ளச் செய்தால், அன்பு குறைந்துவிடுமா? பெற்ற தகப்பன் குழந்தையைத் தன்னுடன் கூடவே வைத்துத்தானா அழகு பார்க்கிறான்? அன்பு காட்டுகிறான்? கொஞ்சி விளையாடுகிறான்? ஆகையால் குழந்தையை ஆள்கள் மூலம் வளர்க்க வேண்டும். சமையல் ஆள்கள் மூலம் செய்விக்க வேண்டும். பெண்கள் ஆண்களைப் போல உயர்ந்த வேலை பார்க்க வேண்டும்.

சர்.இராமசாமி முதலியார் தங்கை சர்.ஏ.லட்சுமணசாமி முதலியார் போல் ஆக வேண்டும். சர். சண்முகம் தங்கை ஆர்.கே.வேங்கடசலம் செட்டியார் போல ஆக வேண்டும். குமாரராஜா தங்கை இராமநாதன் செட்டியார் போல், சிதம்பரம் செட்டியார் போல் ஆக வேண்டும். பொம்மைகளாக, நகை மாட்டும் ஸ்டாண்டுகளாக ஆகக் கூடாது என்கிறேன். எல்லாத் தொண்டுகளையும் பெண்கள் பார்க்க செய்ய முடியும்; உறுதியாய் முடியும் என்பேன். ஆனால், நகைப் பைத்தியம், துணி அலங்காரப் பைத்தியம், அணிந்து கொண்டு சாயல் நடை நடக்கும் அடிமை, இழிவு, சுயமரியாதை அற்ற தன்மைப் பைத்தியம் ஒழிய வேண்டும்.

நம் பெண்கள் நாட்டுக்கு, சமூகத்துக்குப் பயன்படாமல் அலங்காரப் பொம்மைகளானதற்கு, ஆண்களுக்கு விருந்து ஆனதற்குக் காரணம், இந்த பாழாய்ப் போன ஒழுக்கமற்ற சினிமாப் படங்களேயாகும். சினிமா நட்சத்திரங்களைப் பார்த்தே தினம் ஒரு பேஷன் நகை, துணி, கட்டுவெட்டு, சாயல் ஏற்பட்ட தென்பேன். அந்தப் பெண்கள் தன்மை என்ன? ஒழுக்கம் என்ன? வாழ்க்கை என்ன? லட்சியம் என்ன? என்பதெல்லாவற்றையும் நம் குலப் பெண்கள் என்பவர்கள் கருதாமல் புகழ், வீரம் பொது நலத் தொண்டு முதலியவற்றில் கீர்த்தி பெற்ற ஆண்களைப் போல் தாங்களும் ஆக வேண்டுமே என்றில்லாமல் இப்படி அலங்கரித்துக் கொண்டு திரிவது பெண்களின் சமுதாயத்தின் கீழ் போக்குக்குத்தான் பயன்படும் என்று வருந்துகிறேன்.

டீசென்சி - சுத்தம் கண்ணுக்கு வெறுப்பில்லாத ரம்மியம் வேண்டாம் என்று நான் சொல்லுவதாக யாரும் கருதக் கூடாது. அது அவசியம் வேண்டும். ஆனால், அது அதிகப் பணம் கொண்ட, மக்கள் கவனத்தை ஈர்க்கத்தக்க பேஷன், நகை, துணி, வெட்டு போன்ற

அலங்காரத்தால் அல்ல என்றும் (ளஅைமீடந) சாதாரண குறைந்த தன்மையில் முடியும் என்றும் சொல்லுவேன்.

நம் நாட்டுப் பெண்கள், மேல்நாட்டுப் பெண்களைவிடச் சிறந்த அறிவு, வன்மை, ஊக்கம் உடையவர்கள் ஆவார்கள். நம் சீதோஷண நிலை அப்படிப்பட்டது. அப்படி இருக்க ஒரு ருக்குமணி, ஒரு விஜயலட்சுமி என்கின்ற பார்ப்பனப் பெண்கள் தானா பொது வாழ்வில் ஈடுபடத்தக்கவர்களாக ஆக வேண்டும்? ஏன் நம்மவர்கள் ஏராளமாக வெளியில் வரக் கூடாது. இவர்களைத் தடுப்பது சீலை, நகைதுணி, அலங்கார வேஷம் அல்லாமல் வேறு என்ன?

எனவே, பெற்றோர்கள் தங்கள் பெண்களைப் பெண் என்றே அழைக்காமல் ஆண் என்றே அழைக்க வேண்டும். பெயர்களும் ஆண்கள் பெயர்களையே இடவேண்டும். உடைகளும் ஆண்களைப் போலே கட்டுவித்தல் வேண்டும். சுலபத்தில் இது ஆணா - பெண்ணா என்று மற்றவர்கள் கண்டு பிடிக்கமுடியாத மாதிரியில் தயாரிக்க வேண்டும். பெண்களைப் புருஷனுக்கு நல்ல பண்டமாக மாத்திரம் ஆக்காமல், மனித சமுதாயத்திற்குத் தொண்டாற்றும் கீர்த்தி, புகழ் பெறும் பெண்மணியாக்க வேண்டும். பெண்ணும் தன்னை பெண் இனம் என்று கருத இடமும், எண்ணமும் உண்டாகும்படியாக நடக்கவே கூடாது.

ஒவ்வொரு பெண்ணும் நமக்கும் ஆணுக்கும் ஏன் பேதம்? ஏன் நிபந்தனை? ஏன் உயர்வு தாழ்வு? என்ற எண்ணம் எழ வேண்டும். ஏன் இப்படிச் சொல்லுகின்றேன் என்றால், நம் பெண்கள் வெறும் போகப் பொருளாக ஆக்கப்படாது அவர்கள் புது உலகைச் சித்திரிக்க வேண்டும் என்பது தான் என் கருத்து. இந்தப்படி பேசுகின்ற தன்மையும் இதற்குத் தான்.

**15.09.1946.** வட ஆற்காடு மாவட்டம் திருப்பத்தூரில் நடைபெற்ற சுலோச்சனா- சம்பத் மணவிழா உரை. குடி அரசு **21.09.1946.**

# 5.பெண்கள் போலீஸ் வேலைக்கும், இராணுவத்துக்கும் செல்ல வேண்டும்

பெண்கள் தங்களைத் தற்காத்துக் கொள்ளும் பொருட்டு, அவர்களுக்கு ஆயுதம் கொடுக்கப்படுமா என்று மத்திய சட்டசபையில் கேட்கப்பட்ட கேள்விக்குப் பதிலளிக்கையில், மாகாண சர்க்கார் அவசியமானதைச் செய்யும் என்று உள்நாட்டு மந்திரியான தோழர் பட்டேல் கூறியிருக்கிறார்.

மாகாண சர்க்கார் இத்துறையில் எதுவும் செய்யும் என்று நம்பிக்கை நமக்கில்லை. ஏனெனில், பெண்களை அடிமைப் பிறவிகளாக நினைக்கும் வைதிக மனப்பான்மை படைத்தவர்களே பெரிதும் மாகாண மந்திரிகளாயிருக்கின்றனர் என்றாலும், இவர்கள், எங்களுக்கு எந்த விடுதலையும் வேண்டாம்! அடிமைத் தனமே ஆனந்தம் என்று சொல்லக்கூடிய பத்தாம் பசலிகளாகவே இருக்கின்றனர்.

இந்தியப் பெண்கள் கல்வி, சொத்து, திருமண வாழ்க்கைகள் ஆகிய எந்தத் துறையிலும் சுயேச்சையில்லாதவர்களாக இருக்கின்றனர். நவீன நாகரிகம் என்றால், பிரிட்டிஷ் பெண்களைப் போலவும், அமெரிக்க சிங்காரிகளைப் போலவும் உடை உடுத்துவதும், அலங்கரித்துக் கொள்வதும்தான் எனக் கருதியிருக்கிறார்களே தவிர, இரஷ்யப் பெண்களைப்போலவும், துருக்கிப் பெண் களைப் போலவும், போலீஸ், இராணுவம், விமானம் ஓட்டுதல் போன்ற காரியங்களையும் ஆண்களைப் போலவே செய்ய வேண்டும் என்ற நினைப்பே நமது படித்த பெண்களுக்குக் கூட இருப்பதில்லை.

தற்காலப் படிப்பு ஆண்களை எப்படித் தொடை நடுங்கி களாகவும், வெறும் புத்தகப் பூச்சிகளாகவும் ஆக்கிவிட்டதோ, அதைப்போலவே நம் பெண் மக்களையும் வெறும் அலங்காரப் பொம்மைகளாகவும், புல் தடுக்கிகளாகவும் ஆக்கிவிட்டது.

உயர் படிப்புப் படித்துப் பட்டமும் பெற்ற பெண்கள், ஆண்டாள் அன்பு பற்றியும், காரைக்காலம்மையாரின் சிவ பக்தி பற்றியும் பேசிப் பொழுது போக்குகிறார்களென்றால், நம் பெண்களுக்கு நவீன மேல்நாட்டுக் கல்விகூட ஒருவித முன்னேற்றத்தையும்

அளிக்கவில்லையென்பது கண்கூடு.

நம்முடைய ஆட்சிமுறையில் அடிப்படையான, புரட்சிகர மான மாறுதல் ஏற்பட்டாலொழிய, இந்தியப் பெண்களைச் சுயேச்சையுள்ள ஜீவன்களாக ஆக்குவது முடியாத காரியமேயாகும்.

பெண்களுக்கு உத்தியோகம் கொடுப்பதைப்பற்றிப் பேசியுள்ள ஒரிசா முதன் மந்திரியார், போலீஸ் இலாகாவைத் தவிர, மற்ற சர்க்கார் இலாக்காக்களில் பெண்களுக்கு உத்தியோகம் அளிப்பதென்று ஒரிசா சர்க்கார் தீர்மானித்திருப்பதாகக் கூறியுள்ளார்.

இம்மாகாண சர்க்காரைக் காட்டிலும் முற்போக்கான முடிவைச் செய்துள்ள ஒரிசா சர்க்காரை நாம் பாராட்ட வேண்டியதுதான். ஏனெனில், பெண்கள் ஆசிரியர் வேலைக்கும், டாக்டர் வேலைக்கும், நர்சு வேலைக்கும், குமாஸ்தா வேலைக்கும் தவிர வேறு பதவிகளுக்குத் தகுதியற்றவர்கள் என்றே சென்னை சர்க்கார் கூறியிருப்பதாகத் தெரிகிறது.

இதைப்பற்றிப் பெண் மந்திரியான தோழியர் ருக்குமணி லட்சுமிபதி அம்மாளுக்குச் சிறிதும் கவலையிருப்பதாகவே தெரிய வில்லை. அவர்களிடம் முற்போக்கான திட்டங்களையோ, பெண் இனத்தின் சுதந்திரத்திற்கான முயற்சிகளையோ எதிர்பார்ப்பது, 20 வயதுள்ள இளங்காளை, 75 வயது கிழவியை ஓட்டப்-பந்தயத்திற்குக் கூப்பிடுவது போலவேயாகும்.

ஆனால், ஒரிசா சர்க்கார் போலீஸ் இலாகாவை மட்டும் நீக்கி வைத்திருப்பதன் காரணம் நமக்கு விளங்கவில்லை. போலீசாருக்குப் பொதுமக்கள் அஞ்சுகிறார்களென்றால், அவர்களுக்கிருக்கும் தனிப்பட்ட வலுவினால் அல்ல; அவர்கள் கையில் குண்டாந்தடி அல்லது துப்பாக்கிக்கும், அவர்களுக்குள்ள அதிகாரத்துக்குமே பொதுமக்கள் அஞ்சுகிறார்கள். எனவே, பெண்கள் கையிலும் போலீஸ் துப்பாக்கியைக் கொடுத்தால், தபாலாபீசைக் கொளுத்திய மாஜி ஆகஸ்ட் வீரன் கூட அவரைக் கண்டு ஓட்டம் பிடிப்பான் என்பது நிச்சயம்.

இரஷ்யாவில் பெண் போலீஸ் மிகத் திறமையாக வேலை

செய்கிறது. இரஷ்யப் பெண்கள் விமானத்திலிருந்து பாரசூட் மூலம் குதிப்பதிலும் வல்லுநர் எனப் பெயர் பெற்றிருக்கின்றனர்.

இந்நாட்டிலும் போலீஸ் வேலை செய்யும் துணிவும், திறமையும், ஆசையும் உள்ள பெண்கள் ஆயிரக்கணக்கில் இருக்கின்றனர். பெண்கள் படிப்பதே பெரிய அதிசயமாகவும், சைக்கிள் விடுவதை வேடிக்கையாகவும் கருதப்பட்டது போலவே, போலீஸ் உத்தியோகமும் சில ஆண்டுகள் வரையில் அதிசய மாகத் தோன்றலாம். பிறகு, நாளடைவில் அதுவும் இயற்கைக் காட்சியாகவே போய்விடும்.

எனவே, பெண்கள் முன்னேற்றத் துறையில் இரஷ்யா, துருக்கி போன்ற பெண் இனப்புரட்சி நாடுகளை இந்தியா பின்பற்றினாலொழிய, நம் பெண்கள் என்ன கல்வி கற்றாலும், எவ்வளவு சொத்துரிமை பெற்றாலும், வெறும், நகை பீரோ வாகவும், உடை ஸ்டாண்டாகவும்தான் இருப்பார்கள். பெண் உலகில் தலைகீழான புரட்சி ஏற்படக்கூடிய முறைகள் நமக்குத் தேவை. அதுவரையில் துரௌபதையைப் பற்றியும், சீதையைப் பற்றியும் பேசியும் எழுதியும் வருகின்ற ஆமைத் தன்மைதான் இருக்கும். பெரோவிஸ்காயா போன்ற இரஷ்ய வீரப்பெண்கள் நம் நாட்டில் தோன்றவே முடியாது. நளாயினிகள் போன்ற தன்மான மற்ற அடிமைகள்தான் தோன்ற முடியும்.

18.11.1946 விடுதலை

# 6.பொது உடைகள்

இந்திய மக்கள் எவ்வித முன்னேற்றமோ, விடுதலையோ, சுதந்திரமோ பெருவதற்குத் தங்களை அருகர்கள் என்று சொல்லிக் கொள்ளு வதற்கு முன்பாக இந்தியர்கள் ஒரே சமூகத்தார் ஒரே லக்ஷியமுடையவர் என்கின்ற நிலையை அடைய வேண்டியது மிகவும் முக்கியமானது என்பதைப் பற்றி நாம் யாருக்கும் எடுத்துச் சொல்ல வேண்டிய அவசியமில்லை என்றே கருதுகின்றோம். இன்று முற்போக்கோ, சுதந்திரமோ, விடுதலையோ அடைந்திருக்கும் நாட்டார்கள் எல்லாம் முதலில் தங்கள் நாட்டாரெல்லாம் ஒரே சமூகத்தாரென்றும், ஒரே லக்ஷியமுடையவர்கள் என்றுமான பிறகுதான் அவர்கள் முன்னேறவும் விடுதலைப் பெற்று சுதந்திர மடையவும் முடிந்தது என்பதை யறியலாம்.

ஆனால் நமது இந்தியாவைப் பற்றி பேசப் புறப்படுவோமே யானால் இது ஒரே சமூக மக்கள் கொண்ட நாடு என்றோ, ஒரே லக்ஷியமுள்ள மக்களைக் கொண்ட நாடு என்றோ யாரும் சொல்ல முடியாது. ஏனெனில் இந்தியாவானது பல மதங்களாய் பல ஜாதிகளாய் பிரிந்திருப்பதோடு பல உள்வகுப்புகளாகவும் பிரிந்திருப்பதல்லாமல் பாஷைகளிலும், உடைகளிலும், நடை பாவனைகளிலும் பல பல மாறுதல்களைக் கொண்டிருக்கின்றது.

சாதாரணமாக மதம் என்பதைப் பொறுத்த வரையிலாவது அவை தனித் தனி மனிதனுடைய நம்பிக்கையையும் மன உணர்ச்சியையும் சேர்ந்தது என்பதாக ஒரு சமாதானம் சொல்லிக் கொள்ளலாம். ஆனாலும் பாஷைகளும் ஜாதிப் பிரிவுகளும் மக்கள் ஒருவருக்கொருவர் அன்னியோன்னியம் பெற முடியாதபடி உயர்வு தாழ்வு கொடுமைகளுடன் எதற்காக இருக்க வேண்டும் என்பவற்றிற்கு என்ன சமாதானம் சொல்ல முடியும். பல பாஷைகள் மூலமும் மக்கள் பிரிவு படும்படியான பாஷை வேறுபாடுகள் ஏன் என்பதற்கும் இதுவரை யாரும் சமாதானம் சொல்லாததோடு ஒவ்வொரு ஜாதியாரும் தன் ஜாதி பெரிது, தன் ஜாதி பெரிது என்று சண்டை யிடுவதும், ஒவ்வொரு பாஷையாரும் தன் பாஷை பெரிது, தன் பாஷை பெரிது என்று வாதிடுவாருமாக இருந்து கொண்டு அவைகளுக்கு பிரதானம் தேடும் முறையில் வேற்றுமையையும் துவேஷத்தையும் வளர்த்திக் கொண்டு இருக்க வேண்டியும் இருக்கின்றன.

இத்தியாதி வித்தியாசங்கள் எந்தக் காலத்திற்குத் தொலைவது? மக்கள் எந்த காலம் ஒன்றுபட்டு ஒரு சமூகமாகி ஒரு லட்சியம் கொள்ளுவது? என்பவைகளை நினைத்தால் மனம் ஒடிய வேண்டி இருக்கின்றதே தவிர நம்பிக்கைக்கு இடமில்லை என்றாலும் மக்கள் ஒன்றுபட்ட சாயலை அடைந்து பார்வையிலாவது அதாவது மனிதனுக்கு மனிதன் பார்த்தவுடனே ஒரு வேற்றுமை உணர்ச்சி தோன்றுவதற் கில்லாமல் செய்து விட்டால் பிறகு ஒவ்வொருவரும் தன் தன் மதம் ஜாதி வகுப்புப் பாஷை ஆகியவை களைக் காட்டிய பின்பு ஒரு சமயம் வேற்றுமை உணர்ச்சி உண்டானாலும் அதை அது முதலில் பார்த்தவுடன் தோன்றிய ஒற்றுமையுணர்ச்சியின் பலத்தால் தலை தூக்காதிருக்கும்படி செய்யலாம்.

ஆதலால் ஒரு நாட்டினருக்குள் இருக்கும் பல விதமான வேற்றுமைகளை யொழித்து ஒரு சமூகமாக்க வேண்டுமானால் முதலில் சாயலுக்கும் பிரித்துக் காட்டுவதற்கும் ஆதாரமாயிருக்கும் உடையை ஒன்று படுத்த வேண்டியது முக்கியமானதாகும்.

உதாரணமாக மற்ற நாட்டினரான சைனாகாரரையோ, ஜப்பான்காரரையோ இன்று எடுத்துக்கொண்டால் அந்த நாட்டாரில் அந்த நாட்டாருக்குள்ளாகவே ஒருவருக்கொருவர் எவ்வித வித்தியாசத்தையும் கண்டுபிடிக்க முடியாத சாயலையும், உடையையும் கொண்டிருப்பது யாவருமறியலாம்.

அதுபோலவே ஐரோப்பாக்காரருக்குள்ளும் மக்கள் சாயலையோ உடையையோ கொண்டு எந்தவித வித்தியாசத் தையும் கண்டுபிடிக்க முடியாது. இதனால் அத்தேச மக்களுக்கு தங்களுக்குள் ஒரு ஒற்றுமை ஏற்பட்டு ஒரு லட்சியத்திற்கு பாடுபட முடிகின்றது.

இந்த உண்மையையும், இரகசியத்தையும் கண்டுதான் வீரர் கமால் பாட்ஷா அவர்கள் எல்லோரும் ஒரே வித உடையணிந்து ஒரே சாயலாகவே இருக்க வேண்டுமென்று உத்தரவு போட்டதின் மூலம் துருக்கி நாடு சிறியதாக இருந்தாலும் அது தன்னையும் ஒரு வல்லரசென்று மதிக்கும்படி செய்து கொண்டது. இதைப் பின்பற்றியேதான் ஆப்கானிஸ்தானமும் முயற்சிக்கின்றது.

ஆகவே இந்த கொள்கையானது நமது இந்தியாவுக்கு உலகத்திலுள்ள மற்றெல்லா நாட்டைக் காட்டிலும் மிக்க அவசியமானது என்பதை நாம் விளக்க வேண்டியதில்லை என்றே கருதுகின்றோம்.

இத்தியாதி காரணங்கள் கொண்டு நமது நாட்டிற்கும் இப்போது வெகு அவசரமாக உடையும், சாயலும் மாற்றப்பட்டு ஒன்றுபோல் தோன்றும்படி செய்ய வேண்டியது அவசியமென்று கருதியே நாம் இதை எழுத முற்பட் டோம். இவ்வெண்ணம் நமக்கும், நமது நண்பர்களில் பலருக்கும் வெகு நாளாகவே இருந்து வந்தாலும் என்ன மாறுதல் செய்வது என்னும் விஷயத்தில் யோசனையாகவே இருந்து வந்ததால் தாமதப்பட்டு விட்டது.

அதோடு நாம் சொல்லுவது மற்றவர்களுக்கும் சம்மதப்படும் படியாய் இருக்க வேண்டுமே, உடனே பின்பற்ற வேண்டுமே என்கின்ற யோசனையும் இருந்து வந்தது.

சாயல், உடை, பழக்க உணர்ச்சி ஆகியவைகளில் மேல் நாட்டாரைப் போல் கட்டுப்படுகின்ற வழக்கமோ கவலையோ நம்மவர்களுக்கு சிறிதும் கிடையாததலினாலும் அவ்வித வித்தியாசங்களே இந்த நாட்டின் பெருமைக்கும், இயற்கை வனப்பிற்கும் அணிகலனாயிருப்பதாக மக்கள் கருதி வருவதாலும் இது இப்போது பிரஸ்தாபிக்கக் கூடாததாகக் கூட பலருக்குத் தோன்றினாலும் தோன்றலாம்.

மேல் நாட்டார் கட்டுப்பாட்டுக்கு ஒரு உதாரணம் சொல்ல வேண்டு மானால் அவர்கள் உடை, முன் இருந்ததற்கும் இப்போது இருப்பதற்கும் உள்ள மாறுதலும் அதை ஒரே அடியாய் ஐரோப்பா, ஆஸ்ட்ரேலியா, அமெரிக்கா முதலிய கண்டங்கள் உடனே பின்பற்றுவதும் அது போலவே அப்பெண்கள் தலைமயிர் முன் இருந்ததற்கும் இப்போது இருப்பதற்கும் உள்ள வித்தியாசமும் அதை எல்லா கண்டத்து வெள்ளைக்காரரும் பின்பற்றுவதும் பார்த்தாலே போதுமானதாகும்.

அவசியமென்றோ கட்டுப்பாடென்றோ அவர்களுக்குத் தோன்றிவிடுமானால் எந்த மாறுதலானாலும் அதை அரச ஆக்கினைப் போல் பாவித்து எல்லோரும் உடனே கீழ்படியும் வழக்கம்

அவர்களுக்குள் உண்டு. கட்டுப்பாட்டிற்கு மற்றொரு உதாரணமாக ஒன்றை குறிப்பிடுகின்றோம்.

அதாவது ஐரோப்பாவில் பெண்கள் தலைமயிரைக் கத்தரித்து கொண்டதில் சில உயர் குடும்பம் என்று சொல்லப்படும் குடும்பப் பெண்கள் தாங்களும் தலை மயிரைக் கத்தரித்துக் கொண்டாலும் ஜார்ஜ் சக்கரவர்த்தியின் மனைவியான மேரி ராணியார் தலை மயிரைக் கத்தரித்துக் கொள்ளாததால் சற்று அதிருப்தியுடன் கட்டுப்பாட்டிற்குப் பயப்பட வேண்டியவர் களாக இருந்தார்களாம். இதை அரச குடும்பத்தார் அறிந்ததும் இளவரசர் மனைவியாரான இளவரசியை உடனே தலைமயிரைக் கத்தரித்துக் கொள்ளும்படி செய்தார்களாம். இப்போது அது பொது தேசாச்சாரமாய் விட்டது.

ஆனால் நம்ம நாட்டிலோ எப்பேர்பட்ட மாறுதலாயிருந் தாலும் அது எவ்வளவு சரியானதாயும், தேவையானதாயும், இருந்தாலும் பயனும் பொருளும் அற்ற பழைய வழக்கம் என்னும் ‘பேய்க்கு’ அதாவது மூட பயத்திற்கு அடிமையாகி உடனே அதைக் குற்றம் சொல்லவும் உள் எண்ணம் கற்பிக்கவும், எதிர்ப் பிரசாரம் செய்யவும் புறப்பட்டு விடுகிறார்கள். ஆதலால்தான் ஆயிரக்கணக்கான வருஷங்களாக இந்திய மக்கள் மாத்திரம் வேற்றுமைப்பட்டு, பிரிந்து துவேஷங் கொண்டு அன்னியருக்கு அடிமைகளாய் இருக்க வேண்டியவர்களாகவே ஆகி விட்டார்கள்.

ஆகவே, இதை ஒருவழியில் போக்க முயர்ச்சிக்க வேண்டுமென்று கருதியே பல மாறுதல்களுடன் உடை மாறுதல்களைப் பற்றித் துணிந்து ஏதாவது தெரிவிக்கலாமா என்ற எண்ணம் கொண்டு இதனை எழுத முற்பட்டோம்.

இப்போது நமக்கு அதாவது இந்தியர்கள் என்பவர் களுக்குள் பல வித உடுப்பும் சாயலும் இருப்பதைப் பார்க்கின்றோம். பெண்களிலும் அப்படியே. சாதாரணமாக ஆண்களுக்கு இரண்டு பெரிய பெரிய வேஷ்ட்டி அவசியமாகின்றது. இதைத் தவிர ஒன்று அல்லது இரண்டு சட்டையும் அவசியமாகிறது. இது தவிர ஒரு துவாலும் அவசியமாகின்றது. இது தவிர பலருக்குத் தலை உருமால் அல்லது குல்லாயும் தேவையாகின்றது.

அது போலவே பெண்களுக்கும் 16 முழப்புடவையும், ரவிக்கையும், பாடி என்னும் உள் சட்டையும், உள் ஆடை என்று ஒரு பாவாடையும் வேண்டியிருக்கிறது. இவ்வளவு துணிகளும் உயர்ந்த தினுசில் வாங்கவேண்டுமானால் அதிகப் பணச் செலவு மாகின்றது. சாதாரணமாக ஒரு ஜதை உயர்ந்த தினு சானால் 100, 200, 300, 400 ரூ. கூட ஆகிவிடுகின்றது. இவ்வளவு செலவு செய்தும் வேற்றுமையையே காட்டுகின்றது.

சாதாரணமாக யாராயிருந்தாலும் இடுப்புக்கு 4 முளத்தில் ஒரு வேஷ்டியை கைலி போல அதாவது இரு தலவும் மூட்டிய தாகவும், ஒரு முக்கால் கை குடுத்துணி அதாவது Half harm என்று சொல்லக்கூடிய ஒரு சட்டையும், சட்டப்பையில் அடங்கக் கூடிய ஒரு சிறு துவாலும் இருக்கும் படியாக இந்திய உடையை ஏன் மாற்றக் கூடாது என்பதே நமது யோசனை. இந்தப்படிதான் இன்று மலையாள நாட்டில் மகமதியர்களும், கிறிஸ்தவர்களும் உடை அணிகிறார்கள். மற்ற இந்துக்களிலும் ஆண்களும் அநேகமாய் 100க்கு 90 பேர் இப்படித்தான் உடை அணிகிறார்கள்.

மற்றப்படி உடையில் செய்யும் மாறுதல் போலவே தலைமயிர் விஷயத்திலும் ஆண்கள் கிராப்பு செய்து கொண்டும் பெண்கள் வெள்ளைக்காரப் பெண்களைப் போல தலைமயிரை கீழ் காது அளவுக்குக் கத்தரித்துக் கொள்ளவும் செய்து விட்டால் அநேகமாக சாயலிலும் எல்லா மக்களுக்கும் சிறப்பாக ஆண் பெண்களுக்கும் ஒன்றுபட்ட காட்சி ஏற்பட்டு விடும். வித்தியாச உணர்ச்சியும் தானாக மாறிவிடும்.

இப்போது பெண்களுக்குத் தலையில் மயிர் வளர்த்திருப் பதைப் போன்ற அசவுகரியமும், நேரக் கேடும், வீண் செலவும் போல வேறு எதிலுமில்லை என்றே சொல்லலாம். அதனால் அவர்கள் படும் கஷ்டம் நடுநிலையில் இருந்து பார்த்தால்தான் தெரியும். அவர்களது உடை, நகை, தலைமயிர், பெரிய சீலை ஆகியவைகளே பெண்களை பலவீனர்களாகவும், அவற்றின் பொருட்டு அடிமைகளாக ஆக்கி அவர்களை மெல்லியலார் பலமற்றவர்கள் என்று சொல்லும்படியும் ஆக்கிவிட்டது. தலை மயிரை ஒரு அழகாகப் பாவித்து உணர்ச்சி சரீரத்தில் ஊறிக் கிடப்பதால் இதைப் பற்றி நினைக்கும் போதும் சொல்லக் கேட்கும் போதும் மக்களைத் திடுக்கிடச் செய்வதாகத்

தோன்றலாம். ஆனால் உண்மையை ஊன்றிப் பார்த்தால் அதன் உபத்திரவமும் கெடுதலும் தெரியவரும்.

இது போலவே நகை விஷயத்திலும் பல மாறுதல்கள் காணப்பட்டாலும் அவைகள் இந்த மாதிரி அதாவது உடை மாற்றமாகிவிட்டால் தானாகவே மாறிவிடும். மலாய் நாட்டிலும், பர்மா நாட்டி லும், கண்டி நாட்டிலும் இந்துக்கள், கிறிஸ்தவர்கள், மகமதியர்கள், பவுத்தர்கள் உள்பட எல்லோரும் ஆண் பெண் அடங்கலும் இம்மாதிரி உடைதான் உடுத்துகிறார்கள்.

மற்றபடி ஆங்கில உடை உடுத்துவது பலருக்குப் பிடிக்க லாம். ஆனால் அது பெரிதும் குளிர்தேச உடையாதலாலும் உஷ்ண தேசத்திற்கு சவுகரியமில்லாததானதினாலும் அன்றியும் எல்லா மக்களாலும் சாத்தியப்படக் கூடியதல்லவானதாலும் அதை நாம் பொது மக்களுக்குள் புகுத்துவது சிரமமானதும் பொருத்தமற்றதுமாகும் என்று கருதுகின்றோம்.

மற்றபடி செல்வவான்களும் சவுகரியமுள்ளவர்களும் அணிவதில் நாம் ஆட்சேபிக்க வரவில்லை. ஏனெனில் அவ்வுடையின் காரண மாக இப்போது எவ்வித ஜாதி மத வகுப்பு வித்தியாசங்கள் ஏற்படுவதற்கில்லாமல் இருப்பது தான்.

நிற்க, வெறும் ஒரு கால் சட்டை அதாவது சாதாரண செராய் போட்டு குடுத்துணி மாத்திரம் போட்டுக் கொண்டால் என்ன ஆட்சேபம்? என்று சிலர் கேட்கக் கூடும். அந்த உடையும் ஏற்கக்கூடியதானாலும் அது எல்லோருக்கும் அவசரத்திற்கும் சாத்தியப்படாததாகிவிடும் என்று பயப்படுகின்றோம். சிலருக்கு அது அசவுகரியமாகவும் இருக்கக்கூடும் என்றும் நினைக்கின் றோம். ஆனால் அந்தப்படி போட்டுக் கொள்வதை நாம் ஆட்சேபிக்க வரவில்லை. ஏனெனில் அதுவும் முன் சொன்னது போல ஜாதி மத வகுப்பு முதலிய பிரிவினைகளைக் காட்ட சாதனமாயில்லாதிருப்பதால்தான்.

ஆகவே நாம் மேல் சொன்ன அதாவது 4 முளத்தில் ஓரம் இரண்டையும் சேர்த்து மூட்டி தைத்ததாக எந்த வர்ணம் உள்ள துணியாயிருந்தாலும் அதை இடுப்புக்கும், ஒரு முக்கால் கை சட்டையே மேலுக்கும் உடுக்கும் படியான மாதிரியை பொது உடையாக ஆக்கலாம்

என்பது நமக்குச் சரியென்று தோன்றினதால் அதை இப்போது எழுதினோம்.

ஆனால் இதை அதாவது ஒரு மகாநாட்டில் வைத்துப் பேசிய பின்பே அமுலுக்குக் கொண்டு வரக் கருதி இருக்கிறோம். அதற்குள் அவசரப்பட்டு இஷ்டப்பட்டவர்கள் உடுத்திக் கொள்வதில் எவ்வித ஆட்சேபனையும் இல்லை என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

இனி அடுத்தாப்போல் மக்களுக்கிடும் பெயர்கள் விஷயத்திலும் பல பிரிவுகளைக் கண்டுபிடித்து வேற்றுமை உணர்ச்சி கள் ஏற்பட இடமேற்படுகிறது. ஆகவே அவைகளையும் கவனித்து பெயரினால் ஒரு மனிதன் ஒரு மனிதனை பிரித்துக் காணாதபடி பார்த்துக் கொள்ள வேண்டும். இதைப் பற்றி மற்றொரு சமயம் விவரிப்போம்.

- குடி அரசு - 09.11.1930

# 7.பெண்களைப் படிக்க வையுங்கள்!

இந்த நிகழ்ச்சி நம்மில் இதுவரை நடந்து வந்த நிகழ்ச்சிக்கு மாறானதாகும். இதுவரை நாம் பெண்ணடிமை - மூட நம்பிக்கை - ஜாதி இழிவோடு - விவாகம் - முகூர்த்தம் என்னும் பெயரால் நடத்தி வந்தோம். அதை மாற்றிப் பகுத்தறிவோடு, சுயமரியாதை யோடு ஏற்பாடு செய்யப்பட்ட இப்புதிய முறை நிகழ்ச்சியாகும். இதுவரை இருந்த ஆட்சிகள் யாவும் மனு தர்மத்தை அடிப்படை யாகக் கொண்ட ஆட்சியாக இருந்ததால், பகுத்தறிவு - சுயமரியாதைத் திருமணங்கள் சட்டப்படிச் செல்லுபடியாகாதிருந்தது.

இப்போது அமைந்திருக்கும் ஆட்சியானது தமிழர்கள் - பகுத்தறிவாளர்கள் ஆட்சியானதால் சுயமரியாதைத் திருமணம் இதுவரை நாற்பதாண்டு காலமாக நடைபெற்றதும் இனி நடைபெற இருப்பதும் சட்டப்படிச் செல்லுபடியாகுமென்று சட்டம் இயற்றி இருப்பது பாராட்டுக்குரியதாகும். அதற்கு நாம் முதலில் நன்றி செலுத்திக் கொள்ள வேண்டும்.

மனிதன் மிருக பிராயத்திலிருந்தபோது - காட்டு மிராண்டி யாக இருந்த காலத்தில் மனிதன் தன் மூர்க்கத்தனத்தைக் காட்டப் பெண்ணை அடக்கியாள, பெண்ணைத் தனக்கு அடிமையாக்கிக் கொள்ள ஏற்பாடு செய்யப்பட்டது தான் இந்தக் கல்யாணம். புருஷன் - மனைவி தன்மையே தவிர, மனிதன் சுதந்திரமாக இருந்த போது ஏற்பட்டதல்ல.

நம் மதம் பெண்களை அடிமையாக்குவது போல, நம் கடவுளும் பெண்களை அடிமையாக்குவதாகவே இருக்கிறது. நம் இலக்கியங்கள் புராணங்கள் எல்லாம் அப்படித்தான் பெண்ணடிமையை நிலைநிறுத்தக் கூடியதாக இருக்கிறது. உயர்ந்த இலக்கியம் என்று சொல்லப்படுகிற வள்ளுவனின் குறளும் பெண்ணடிமையை வலியுறுத்துவதாக இருக்கிறது. நம் நாட்டில் மட்டுமல்ல, உலகத்திலேயே நாகரிகமடைந்த விஞ்ஞானத்தில் உயர்ந்த நாடுகளும் பெண்களை அடிமைகளாகவே கருதுகின்றன.

துலுக்கன், கடவுள் ஆணையும் பெண்ணையும் ஒன்றாகத் தான் படைத்தான் என்று சொல்வார்களே தவிர, பெண்களுக்கு உறை

போட்டு மூடி வைத்துக் கொள்வான். வெள்ளைக்காரன் மிகச்சிறந்த விஞ்ஞான அதிசய - அற்புதங்களைக் கண்டு பிடித்தாலும், பெண் விஷயத்தில் அப்படித்தான். கல்யாண மானால் பெண் பெயரையே சொல்ல மாட்டான். மிஸ்ஸஸ் வில்சன், மிஸ்ஸஸ் ராபர்ட் என்று ஆண் பெயரைப் போட்டுத் தான் அழைப்பான். உலகமே பெண்களை அடிமையாக்கித் தான் வைத்திருக்கின்றது. நான் தான் இந்தப் பெண்ணடிமை ஒழிய வேண்டுமென்று 40-வருடங்களாகப் போராடி வருகிறேன்.

நமக்கிருக்கிற - நமக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிற மதம், சாஸ்திரம், புராணம், நீதி எல்லாம் மனிதனை முட்டாளாக் குவதாகவே இருக்கின்றன. இவையெல்லாம் ஒழிக்கப்பட்டால் தான் நம் மக்கள் அறிவு பெற முடியும். மனித சமுதாயத்தில் யாருக்கு உரிமை கொடுத்தான் என்றால் பொட்டுக் கட்டிய தேவடியாளுக்குத்தான் உரிமை கொடுத்தான். சுதந்திரம் கொடுத்தான். அவள் தான் தன் இஷ்டப்படி சுதந்திரத்தோடு நடந்து கொள்ள முடியும். மற்றவள் வீட்டிற்குள் தான் கிடக்க வேண்டும். வெளியே வரக் கூடாது. ஜன்னல் பக்கம், கதவுப் பக்கம் எட்டிப் பார்க்கக் கூடாது என்றெல்லாம் கட்டுப்பாடு செய்து பெண்களை எதற்கும் லாயக்கற்றவர்களாக்கி விட்டார்கள்.

இந்த ஆண்கள் நாங்கள் தோன்றுகிறவரை அவன் இஷ்டப்படி எத்தனைப் பெண்கள் வேண்டுமானாலும் கட்டிக் கொள்ளலாம் என்று தானே இருந்தது. நாங்கள் தோன்றிய பின் தானே ஒருவன் ஒருத்தியைத் தான் கட்டிக் கொள்ள வேண்டும். அவள் உயிரோடு இருக்கும் போது வேறு ஒருத்தியைக் கல்யாணம் செய்து கொள்ளக் கூடாது. அப்படிச் செய்வது சட்டப்படிக் குற்றமாக்கப்பட்ட பின் தானே ஆண் ஒருத்தியோடு இருக்கிறான். இல்லாவிட்டால் கிருஷ்ண பரமாத்மா மாதிரி அவனிஷ்டத்திற்கு எத்தனைப் பெண்களை வேண்டுமானாலும் கல்யாணம் செய்து கொள்வானே?

பெண்களுக்கு நகை போடுவது, அவர்களை அடிமை களாக வைத்திருக்கவேயாகும். இதை 40-வருடங்களுக்கு முன்பே நான் சொல்லி இருக்கின்றேன். இதே கருத்தை இன்று ஒரு வெள்ளைக் காரன் சொல்லியிருக்கிறான்.

ஜாதகம் - ஜோசியம் - பொருத்தம் - நாள் - நட்சத்திரம் - நேரம் - காலம் லக்கணம் எல்லாம் மனிதனை முட்டாளாக்கு வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டவையாகும். இவற்றுக்கும் மனித வாழ்விற்கும் எந்தவிதச் சம்பந்தமும் கிடையாது என்பதோடு, இவற்றால் எந்தப் பலனும் இல்லை. இவற்றையெல்லாம் மனிதன் கடைப்பிடிக்க வேண்டுமென்பதற்காகவென்றே ஏற்பாடு செய்யப்பட்ட இராமாயணம் - பாரதம் - சிலப்பதிகாரம் - பெரிய புராணம் முதலியவற்றில் காணப்படும் பாத்திரங்களின் திருமணம் யாவும் நேரம், காலம், பொருத்தம், ஜாதகம், ஜோசியம் யாவும் வசிஷ்டன், வியாசன் போன்ற ரிஷிகளால் பார்க்கப்பட்டு நாள் குறிப்பிடப்பட்டு அந்த நாளில் - அந்த நேரத்தில், முனிவர்கள், ரிஷிகள், தேவர்கள் முன்நிலையில் கூட நடந்ததாக எழுதி இருக்கின்றான்.

அப்படி நடைபெற்றதாக எழுதிவிட்டுப் பிறகு சீதையை இன்னொருவன் தூக்கிக் கொண்டு போய்ச் சினையாக்கி நான்கு மாத கர்ப்பத்தோடு வந்தாள். அவள் புருஷன் ராமன் அவளைக் காட்டிற்கு அனுப்பி விட்டான் என்றும், ஒருவனுக்குக் கல்யாணம் செய்து கொடுக்கப்பட்ட திரவுபதை அய்ந்து பேருக்கு வைப்பாட்டியாக இருந்தும், திருப்தியடையாமல் ஆறாவதாக ஒருவனை நினைத்தாள் என்றும்,

திருமண மேடையிலே தன் மனைவியைத் தவிக்க விட்டுவிட்டு கோவலன் மாதவியோடு சென்றான், அதற்காக இவள் தன் வீட்டுப் பொருளையெல்லாம் நகைகளையெல்லாம் தன் கணவனிடம் கொடுத்து விட்டு இவள் சோறு தின்னாமல், பாயில் படுக்காமல், கூந்தல் முடிக்காமல் இருந்தாள் என்றும், தன் கணவன் பட்ட கடனுக்காக இன்னொருவனிடம் அடமானமாக வைக்கப்பட்டுச் சந்திரமதி கஷ்டப்பட்டாள் என்றும், தான் மோட்சத்திற்குப் போவதற்காக தன் மனைவியைப் பரதேசிப் பார்ப்பானோடு அனுப்பி வைத்தான் என்றும் எழுதி வைத்திருக்கின்றான்.

இவை யாவும் நடந்தவை என்று நான் சொல்லவில்லை. நம் காட்டுமிராண்டித் தன்மையையும், முட்டாள்தனத்தையும் நிலைநிறுத்துவதற்கென்று கட்டப்பட்ட சப்பைக்கட்டுகளே இவை. ஜாதகம், ஜோசியம், பொருத்தம், நேரம், காலமெல்லாம் முட்டாள்தனமானவை என்பதையே அதை நிலை நிறுத்து வதற்காக

எழுதப்பட்டவற்றிலிருந்து தெரிகிறது.

பெண்கள் சுதந்திரமாக இருக்க வேண்டுமானால் நன்றாகப் படிக்க வேண்டும். தாய்மார்கள் தங்கள் பெண்களை நன்றாகப் படிக்க வைக்க வேண்டும். அவர்கள் தாங்களாகவே தங்கள் வாழ்க்கையை நடத்தக் கூடிய அளவிற்கு ஊதியம் பெறும்படி யான அளவிற்குப் படிக்க வைக்க வேண்டும். அல்லது அவர்கள் வாழ்விற்கேற்ற தொழிலைக் கற்றுக் கொடுக்க வேண்டும். பெண்களுக்குத் தாங்கள் அடிமை ஜீவன் என்கின்ற எண்ணம் மாறி சுதந்திர ஜீவன் என்கின்ற எண்ணம் வரவேண்டும். மனித ஜீவனின் தன்மையின் காரணமாக சமூதாயத்திற்குப் பயனில்லா மலே, பலன் எதுவுமில்லாமலே போய்விட்டது.

தமிழனுக்கு இதுபோன்ற ஒரு நிகழ்ச்சி இருந்தது என்றோ, தமிழன் புருஷன் பெண்டாட்டியாக வாழ்ந்தான் என்றோ சொல்ல முடியாது. இந்நிகழ்ச்சியினைக் குறிப்பிட்டுக் காட்டக் கூடிய சொல் தமிழில் இல்லை. வடமொழியிலிருக்கிற கல்யாணம் - விவாகம் - முகூர்த்தம் - தாராமுகூர்த்தம் என்கின்ற சொற்கள் கூட இந்நிகழ்ச்சியைக் குறிப்பிடும் சொற்கள் அல்ல.

திருமணம் என்ற சொல்லானது 1938- இல் நடைபெற்ற இந்தி எதிர்ப்பின் போது தமிழின் மேல் ஏற்பட்ட ஆர்வத்தால் கண்டுபிடிக்கப்பட்டுப் பயன்படுத்தப்பட்ட சொல்லே தவிர, இது கூட இந்நிகழ்ச்சியினைக் குறிப்பிட்டுக் காட்டக் கூடிய பொருள் சொல் அல்ல. பின் தமிழன் எப்படி வாழ்ந்தானென்றால், ஆணும், பெண்ணும் தாங்களாக விரும்பிக் கூடி காதலர்களாக, அன்பர் களாக, நண்பர்களாக ஒருவருக்கொருவர் எஜமான் - அடிமை என்கின்ற பேதமின்றி சம அந்தஸ்துள்ளவர்களாகவே வாழ்க்கை நடத்தியிருக்கின்றனர்.

இறுதியாக மணமக்களுக்குச் சில வார்த்தைகள் சொல்கிறேன். நீங்கள் அடக்கமாகப் பிழையுங்கள். கியாதியாக (புகழுடன்) வாழுங்கள். ஆடம்பரமாக இருக்காதீர்கள். வரவிருக்குள் அடங்கிச் செலவிட பழகுங்கள். வாழ்க்கை நமக்கு மட்டுமல்ல என்பதை உணர்ந்து மனித சமுதாய வளர்ச்சிக்கு உங்களாலான உதவியைச் செய்யுங்கள். நம் இனத்தைச் சேர்ந்தவன் யாராக இருந்தாலும் அவனைச் சகோதரனைப் போலக் கருதுங்கள். கூடிய வரை பிள்ளைப் பெறாமல் பார்த்துக்

கொள்ளுங்கள். நிறைய பெற்றுக் கொண்டு வாழ்வு முழுவதும் அதைக் பற்றிய கவலைப்பட்டுக் கொண்டிருக் காமல் ஒன்று மிஞ்சினால் இரண்டு அதற்கு மேல் பெறாமல் நிறுத்திக் கொள்ளுங்கள். அதனால் நம் கவலை குறைவதோடு மக்கள் சமுதாயத்திற்கும், நாட்டிற்கும் நன்மையுமாகும்.

- 08.07.1968 அன்று நடைபெற்ற தொல்காப்பியன் - இராசாமணி, நெடுஞ்செழியன் - கல்கி ஆகியோர் திருமண உரை. விடுதலை 10.08.1968

# 8.ஆண்- பெண் மாணவர்கள் ஒன்றாகப் படிக்கவேண்டும்

17-12-35 ஆம் தேதி கூடிய ஈரோடு முனிசிபல் கூட்டத்தில் முனிசிபல் கௌன்சிலர் தோழர்கள் எஸ்.ஆர். கண்ணம்மாள், கேசவலால் சேட் ஆகியவர்கள் முனிசிபல் அதிகாரத்திற்குட்பட்ட உத்தியோகங்களில், பெண்களையும் நியமிக்க வேண்டுமென்று தீர்மானங்கள் கொண்டுவந்ததும் அத்தீர்மானங்கள் சில திருத்தங் களுடன் நிறைவேறியதும் வாசகர்கள் அறிந்திருக்கலாம்.

அத்தீர்மானங்களின்படி முதலாவதாக அம்மைகுத்தும் வேலைக்கு ஒரு பெண்மணியையும், ஆண் பாடசாலைகளுக்குப் பல பெண் உபாத்தியாயனிகளையும், (ஆசிரியை) ஆண் பிள்ளைகளையும், பெண் பிள்ளைகளையும் ஒன்றாகச் சேர்த்தும், அவற்றிற்கும் பெண் உபாத்தியாயனிகளையும் ஆண் உபாத்தியாயர்களும்(ஆசிரியர்) சேர்ந்து கற்பிக்கும்படியும் உத்திரவிட்டிருக்கிறார்கள். இதற்காக நாம் முனிசிபல் கவுன்சிலையும், சிறப்பாக கமிஷனரையும் பாராட்டுவதுடன், தீர்மானத்தின்படி மற்ற உத்தியோகங்களுக்கும் பெண்களை நியமிக்கவேண்டு மென்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

நிறைவேறிய தீர்மானங்கள்

1. C.R. No 462 நம்பரின் தீர்மானமாவது

2. பெண்களுக்கு உத்தியோகம் கொடுக்கும் விஷயத்தில் மரணஜனன பதிவு செய்தல், அம்மை வைத்தல், ஷராவ், டைப் அடித்தல், ஆபீஸ் பியூன் வேலை, மற்றும் அநேக விதமான உத்தியோகங்களைப் பெண்களுக்கு வீதாச்சாரப்படி ஒதுக்குவ துடன் அவைகளில் அவர்களை நியமனஞ்செய்யவேண்டும்.

3. மேலே கண்ட உத்தியோகங்களுக்கு விசேஷமான பரீட்சை, அல்லது தேர்ச்சி வேண்டுவதாயிருந்தால், கூடிய வரையில் வேண்டிய உதவியைக் கவுன்சிலர்கள் செய்ய வேண்டியது.

4.பெண்பிள்ளைகள் பாடசாலைகளிலுள்ள உபாத்தியாயினிகளைத் தவிர்த்து ஆண்பிள்ளைகள் பாடசாலைகளிலும், பெண் உபாத்திமார்களை நியமனஞ் செய்யவேண்டும் ஏகமனதாய் நிறைவேறிற்று.

குடி அரசு - 09.06.1935

# 9.கோலமும், தையலும்தான் பெண்கள் கற்க வேண்டுமா?

ந
மது நாட்டில் பெண்கள் சமயலுக்கும், படுக்கைக்கும் மாத்திரம் பயன்ட
களுக்குள்ளும், வயோதிகர்களுக்குள்ளும் இருந்து வருவதோடு பல டெ
இருக்கிறார்கள்.

சில பெண்கள் இந்த இரண்டு வேலைகளுக்கும் இடையூறு இ
சபையில் இருந்தவர்களும், இருக்க பாக்கியம் பெற்றவர்களும் கூட டெ
மான கல்வி கற்றால் போதும் என்றும் சொல்லிக்கொண்டு இருக்கிறா

நம்முடைய தேசத்து தேசியத் தலைவர்களும், மகாத்
மாக்கள் என்போர்களுக்கும் பெண்கள் சந்திரமதி போலும், சீதை போ

இப்படிப்பட்ட கஷ்டமான நிலையில் நம் தென் இந்தியாவில்

அப்பெண் வக்கீல்களில் இருவர்கள் தோழர் எம்.எ.
கிருஷ்ணம்மாள், எம்.எ.
ஏதுகிரியம்மாள் ஆகியவர்களாவார்கள். இவர்களது மூத்த சகோதரியா
காலத்துக்கு முன்தான் பரிட்சையில் தேறி அட்வகேட்டாகி இருக்கிறா

தங்களைப் பெண்கள் பிரதிநிதிகள் என்று சொல்லிக்
கொண்டு
வெட்கமில்லாமல் கும்மியும், கோலாட்டமும், கோலமும், தையலும் தா
அப்படிப்பட்ட பெண்களுக்கு இனியாவது புத்தி வருமா? என்று நினை

பகுத்தறிவு - 02.09.1934

# 10. பெண்களே கணவனைத் தேர்ந்தெடுக்க வேண்டும்

நாம் மூட நம்பிக்கைகளை ஒழிக்க வேண்டுமென்று சொல்லுகிறோம். ஆனால் மணமக்களை வாழ்த்துவது என்பதும் கூட ஒரு மூட நம்பிக்கையே ஆகும். அதையே இப்போது பலர் செய்தார்கள்.

இது ஒரு சம்பிரதாயமே ஆகும். இந்த முறையையேப் பார்ப்பான் காசு பறிப்பதற்காக ஏற்பாடு செய்ததே ஆகும். அவர்களுடைய வாழ்க்கையில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்கின்ற அறிவுரை கூறவே இதுபோன்ற நிகழ்ச்சியாகும்.

நாகரசம்பட்டியார் குடும்பம் நமக்கு மிக வேண்டிய குடும்பம் தான் என்றாலும், சொன்னால் வெட்கப்பட வேண்டும். சுயமரியாதைப்படி நடக்கிறதாகச் சொல்லிக் கொண்டு செய்யும் இத்திருமணமானது, சுயமரியாதைக் கொள்கைக்கு ஏற்றதாக இல்லை. இதை இப்படி ஏன் சொல்கிறேன் என்றால், இந்த இரண்டு திருமணங்களும் அவர்கள் சாதிக்குள்ளேயே செய்து கொண்டார்கள். அப்படி கொள்ள வேண்டிய அவசியம் என்ன வந்தது? இதில் சம்பந்தம் அவர்களுக்கு இடித்துக் கூட சொல்ல வேண்டிய உரிமை எனக்கு உண்டு.

இந்தச் சிறு வயதிலேயே அவர் தனது பெண்ணுக்குத் திருமணம் ஏற்பாடு செய்திருக்க வேண்டியதில்லை. அதை இன்னும் நல்ல முறையில் படிக்க வைத்திருக்கலாம். அது இன்னும் மற்ற தாய்மார்களும் தங்கள் பெண்களுக்கு அவசரப் பட்டுத் திருமணம் செய்யக் கூடாது. நன்றாகப் படிக்க வைக்க வேண்டும். அவர்களே, தங்களின் கணவனைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும்படிச் செய்ய வேண்டும்.

மூட நம்பிக்கையான காரியங்களை விட்டு விட வேண்டும். நமக்கு வேண்டியதெல்லாம் நம் நாட்டைப் பொறுத்தவரை அறிவின்மைக் குறை நீங்க வேண்டியதே ஆகும். அதைக் கொண்டு எல்லாவற்றையும் சரி செய்து கொள்ள வேண்டும். சமத்துவம் வரவேண்டும்.

கொஞ்ச காலத்திற்காவது பிள்ளை பெறுவதை நிறுத்திக் கொள்ள வேண்டும். நம் நாட்டில் உள்ள குறைகளில் மிகப் பெரியது இந்தப் பிள்ளைப்பேறுதான் ஆகும். இனி வரப் போகும் அரசாங்கமும் இதைத் தடுக்க முயற்சிக்கும் வகையில் பெண்களின் வயதை 21-ஆக்கப் போகிறது. பிள்ளைப் பெறுவது தங்களின் பிற்காலத்தில் தங்களுக்குச் சம்பாதித்துப் போட வேண்டுமே என்று கருதுகிறார்கள். இனி சக்தி குறைந்தால், சர்க்கார் மான்யம் கொடுக்கும்.

மனிதன் சந்தோஷப்பட வேண்டுமானால் குழந்தைகளைக் குறைவாகப் பெற்றுக் கொள்ள வேண்டும். அதிகமாகப் பெற்றுக் கொண்டு அவஸ்தைக்கு ஆளாகக் கூடாது. காமராசரின் அரசாங்கத்தால் இப்போது கல்வி பரவி இருக்கிறதே ஒழிய, நம் மக்களால் கல்வி பரவவில்லை. படித்தவர்கள் எல்லோரும் சர்க்கார் உத்தியோகம் வேண்டுமென்று நினைக்கிறார்கள். அது நமக்கும் தொல்லை; சர்க்காருக்கும் தொல்லை. படிப்பைக் கொண்டு தொழில் செய்ய வேண்டும். தொழில் துறையில் நாம் ரொம்பவும் முன்னுக்கு வரவேண்டும்.

படித்தவர்கள் மனம் அரசாங்கத்தில் தான் வேலை பார்க்க வேண்டும் என்ற நிலையில் இருக்கிறது. இது மாற வேண்டும்.

நாம் நமக்காகத் தான் வாழ்கிறோம் என்ற எண்ணத்தை மாற்றிக் கொள்ள வேண்டும். மற்றவர்களுக்கு - மற்ற மக்களுக்குத் தங்களால் ஆன தொண்டுகளைச் செய்ய வேண்டும்.

நம் மக்களுக்கு இன உணர்ச்சி பெருக வேண்டும். மற்ற பிற இனத்தானுக்கு இருப்பது போல் தன் இனம் முன்னேற வேண்டும். பார்ப்பானை எடுத்துக் கொள்ளுங்கள் - அவன் பிச்சைக்காரனாக இருந்தாலும், சங்கராச்சாரியாக இருந்தாலும், இராஷ்டிரபதியாக இருந்தாலும் அவன் எண்ணமெல்லாம் தனது இனத்தின் முன்னேற்றத்தைப் பற்றியதாகவே இருக்கும். அதுபோன்ற எண்ணம் நமக்கு வர வேண்டும். நம் மக்கள் முன்னேற வேண்டு மென்பதில் ஒவ்வொருவருக்கும் எண்ணம் இருக்க வேண்டும். அதற்காகப் பாடுபட வேண்டும்.

மணமக்கள் வரவுக்கு மேல் செலவிடக் கூடாது. ஆடம்பர

மாகத் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளாமல் சராசரி மனித வாழ்வு வாழ வேண்டும். மற்ற மக்களோடு சரி சமமாகப் பழக வேண்டுமென்று கேட்டுக் கொள்வதோடு, இந்நிகழ்ச்சியை ஏற்பாடு செய்த மணமக்கள் குடும்பத்தினருக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

21.05.1967- நாகரசம்பட்டி திருமண விழா உரை.
விடுதலை - 28.05.1967

# 11.பெண்கள் தங்களுக்கேற்றத் துணைவர்களை ஏற்றுக் கொள்ள அனுமதிக்கவேண்டும்

இனி நம் நாட்டுப் பெண்கள் பிடரியோடு முடியைக் கத்தரித்துக் கொள்ள வேண்டும். சட்டை போட்டுக் கொள்ள வேண்டும். லுங்கி கட்டிக் கொள்ள வேண்டும். நம் பெண்கள் அலங்காரத்திலேயே பகுதி நேரத்தைச் செலவிடுகின்றனர். மற்றவர்கள் தங்களைப் பார்க்க வேண்டுமென்பதற்காகவே தவிர, வேறு எதற்காக அலங்காரம் செய்து கொள்ள வேண்டும்? நம் பெண்கள் செய்து கொள்கிற அலங்காரம் மற்றவர்களின் உணர்ச்சியைத் தூண்டக் கூடிய வகையில் அமைந்துள்ளது. தங்களுடைய அவயவங்களைப் படம் பிடித்துக் காட்டுவது போன்று உடை உடுத்திக் கொள்கின்றார்கள். இது எப்படி மற்றவர்களின் உணர்ச்சியைத் தூண்டாமலிருக்கும்? இப்படிப் பட்ட பெண்கள் தான் கற்பைப் பற்றிப் பேசுகின்றார்கள்.

அலங்காரத்திற்காகப் பெண்கள் அணிந்து கொள்ளும் நகையின் காரணமாக, நாட்டின் பொருளாதாரம் எவ்வளவு முடங்கிக் கிடக்கிறது என்பதை எவரும் எண்ணிப் பார்ப்பதே கிடையாது. ஆண், பெண் இருவருக்கும் எந்தவித வித்தியாசமும் தெரியாத வகையில் உடை இருக்க வேண்டும்.

நமக்கு முன் வாழ்ந்தவன் எவனாக இருந்தாலும், குருவாக இருந்தாலும், மதத் தலைவனாக இருந்தாலும், மற்றவனாக இருந்தாலும் அவன் கருத்துகளை அப்படியே ஏற்கக் கூடாது. அவன் கருத்துகள் எவ்வளவு உயர்ந்தனவாக இருந்தாலும் அதனை நம் அறிவைக் கொண்டு சிந்தித்து அவை தற்காலத்திற்கு ஏற்றதா என்று பார்த்து ஏற்கவேண்டும்.

நம் பெண்கள் குறைந்த பட்சம் 20 வயது வரை படிக்க வைக்க வேண்டும். அவர்களுக்குக் கல்வியளிக்க வேண்டும். வாழ்விற்கு ஏற்ற வருவாயுள்ள தொழிலை அவர்களுக்குக் கற்பிக்க வேண்டும். அதன்பின் அவர்களாகத் தங்களுக்கேற்ற துணைவர்களை ஏற்றுக் கொள்ள அனுமதிக்க வேண்டும். வாழ்க்கையில் கவலையற்ற வாழ்வு வாழ வேண்டும். மனிதன் என்றால்-பகுத்தறிவுள்ளவன் என்றால், அதற்குப் பொருள் கவலையற்று வாழ்வதேயாகும்!

28.03.1971 - மதுரை மாவட்டம் டி.வாடிப்பட்டி திருமண விழாஉரை.
விடுதலை - 08.04.1971

# 12.ஒரு பெண்ணுக்கு இத்தனை கிராம் தங்கத்திற்கு மேல் இருக்கக் கூடாது என்று தடை செய்யவேண்டும்

இந்தத் திருமணம் சுயமரியாதைக்காரர் திருமணமே யொழிய, சுயமரியாதைத் திருமணமல்ல. உண்மையான சுயமரியாதைத் திருமண முறை வர இன்னும் நாளாக வேண்டும். இம்முறை என்னால் ஏற்பாடு செய்யப்பட்டது என்று சொன்னாலும், இது பழைய முறைக்கு மாறுதல் முறையாகும்.

இம்மாறுதல் முறையைக் கொண்டு வந்ததற்கு முக்கியக் காரணம், பெண்களின் அடிமைத் தன்மையைப் போக்க வேண்டும். சடங்குகளை ஒதுக்கவேண்டும் என்பதற்காகவேயல்ல. பெண்கள் ஆண்களைப் போன்று அடிமை நீங்கி சமத்துவமாக வாழ வேண்டுமென்பதை முக்கியமாகக் கொண்டதாகும்.

பெண்கள் ஆண்களுக்கு அடிமைகள், ஆண்களுக்குத் தொண்டூழியம் செய்யக் கூடியவர்கள், ஆண்கள் விருப்பப்படி நடந்து கொள்ள வேண்டியவர்கள் என்றிருக்கிற அடிமைத் தன்மை ஒழிய வேண்டுமென்பதற்காகவேயாகும். திருமணம் என்கின்ற இம்முறையானது தமிழனுக்குக் கிடையாது. தமிழனுக்கு இருந்தது என்பதற்கு ஆதாரமில்லை.

வாழ்வின் முக்கியமான இம்முறையைக் குறிப்பிடக் கூடிய தமிழ்ச் சொல் தமிழில் கிடையாது. நாம் ஏற்படுத்திய சொல் தான் திருமணம் என்பதாகும். இப்பெயருக்கும், இந்நிகழ்ச்சிக்கும் சம்பந்தமே இல்லை. நம் நாட்டிற்குப் பார்ப்பனர்கள் வருவதற்கு முன் இப்படிப்பட்ட ஒரு வாழ்க்கை முறையே கிடையாது.

தமிழர்கள் ஆண்களும், பெண்களும் அன்பால், காதலால் கூடி வாழ்ந்தார்களே தவிர, கணவன் - மனைவியாக வாழவில்லை. இம்முறையானது பார்ப்பனருடைய நாட்டிலிருந்து வந்தது என்பதற்கும், இம்முறை பார்ப்பனர்களால் அவர்களிடையே ஒழுக்கம் குன்றியபோது ஏற்பாடு செய்யப்பட்டது என்பதற்கும், தமிழர்களின் பழைய நூலான தொல்காப்பியத்தில் ஆதாரங்கள் இருக்கின்றன.

மனுதர்ம சாஸ்திரத்தின்படி சூத்திரர்களுக்குத் திருமணம் செய்துகொள்ள உரிமை கிடையாது. பார்ப்பான் சூத்திரன் வீட்டிற்கு வந்து சூத்திரனுக்குத் திருமணம் செய்து வைக்கக் கூடாது என்பது சாஸ்திரமாகும். எனவேதான் பார்ப்பான் சூத்திரனுக்குத் திருமணம் செய்து வைக்கிறபோது அவர்களுக்குப் பூணூலை மாட்டி பார்ப்பானாக்கித் திருமணம் செய்து வைப்பான். தாலி கட்டுவது என்பது பெண்களின் அடிமையை வலியுறுத்தக் கூடியதேயாகும். நம்முடைய நல் வாய்ப்பின் காரணமாக இன்றைய அரசு அமையப் பெற்றதால் அண்ணா அவர்கள் முதல் காரியமாக, சட்டப்படிச் செல்லாதென்றிருந்த இம்முறையினைச் சட்டப் பூர்வமாக்கினார்கள்.

இரண்டாவது, இம்முறையானது பகுத்தறிவுள்ள மனிதர் களை மடையர்களாக்குவதற்காக ஏற்பாடு செய்யப்பட்டதாகும். பொருத்தம், ஜாதகம், ஜோசியம், நேரம், நாள், நட்சத்திரம் என்பவையும், பகலில் விளக்கு வைப்பது, அம்மி, அரசாணி போன்றவை வைப்பதெல்லாம் தேவைக்கும், அவசியத்திற்கும், அறிவிற்கும் சம்பந்தமற்றதாகும். உலகிலுள்ள 400 கோடி மக்களில் 370 கோடி மக்களுக்கு இந்தச் சடங்குகள் எதுவும் கிடையாது. இதெல்லாம் மனிதனை மடையனாக்குவதற்காகவேயாகும்.

மூன்றாவது பெரிய கேடு மதம், ஜாதி பார்ப்பதாகும். மக்களை ஒதுக்கிப் பிரிவுபடுத்துவதாகும். இம்மூன்றையும் ஒழிப்பதே சுயமரியாதை இயக்கமாகும். எதையும் பகுத்தறிவு கொண்டு ஆராய்ந்து செய்யவேண்டும். பொருத்தம் என்பது ஆண், பெண்ணையும், பெண் ஆணையும் விரும்புவதே தவிர, எவனோ போடுகிற முடிச்சியிலோ, ஜாதகத்திலோ இல்லை.

பெண்களை **20** வயதுவரை படிக்க வைக்கவேண்டும். பெண்கள் தாங்களாகவே தங்களுக்கேற்ற துணையைத் தேடிக் கொள்ளவேண்டும். உலகில் மனித சமுதாயத்தைப் பற்றி எவனுமே சிந்திக்கவில்லை. வந்த பெரியவர்கள், இலக்கியங்கள் எல்லாம் பெண்களை அடிமையாக இருக்கவேண்டும். ஆண்களுக்கு அடங்கி நடக்கவேண்டுமென்று தான் சொல்கின்றன. பொது இலக்கியம் என்று சொல்லப்படுகின்ற திருக்குறள் கூட, பெண்களை இழிவுபடுத்துவதாக, அடிமைப் படுத்துவதாகவே இருக்கின்றது. மனித சமுதாயம் முன்னேற்ற

மடைய வேண்டுமானால், பெண்கள் அறிவுபெற வேண்டும். மனிதன் சாஸ்திரங்களையும், சம்பிரதாயங்களையும் பார்த்து நடக்காமல் தங்களின் அறிவைப் பார்த்து அதன்படி நடக்க வேண்டும்.

ஆண்களும், பெண்களும் பள்ளிகளில், கல்லூரிகளில் சேர்ந்து படிக்க வேண்டும். அரசாங்கம் இதற்கு ஏற்பாடு செய்ய ஏனோ தயங்குகின்றது. ஆண்களும், பெண்களும் சேர்ந்து பழகினால்தான் அவர்கள் அனுபவம் பெற முடியும்.

வாழ்க்கையில் நாம் பிறருக்கு நம்மாலியன்ற உதவியைச் செய்ய வேண்டும். வரவிற்கு அடங்கி வரவிற்குள் செலவிட்டுச் சிறிதாவது மிச்சம் செய்ய வேண்டும். கடன் வாங்குவதால் மனிதன் தன்மானத்தையும், சுதந்திரத்தையும் இழக்க நேரிடுகிறது. பெண்கள் ஆடம்பரமாக வாழக் கூடாது. நிறைய நகை போட்டுக் கொள்வது உயர்ந்த விலையுள்ள உடைகள் அணிவது, சிங்காரம் செய்து கொள்வதுகூடாது. சாதாரணமாக வாழவேண்டும்.

அரசாங்கத்திற்கு இன்னும் துணிவு வரவில்லை. துணிவு வந்தால் ஒரு பெண் மீது இத்தனை கிராம் தங்கத்திற்கு மேலிருக்கக் கூடாது என்று தடை செய்யவேண்டும். குழந்தை பெறுவதில் மிக ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். ஒன்று, தப்பினால் இரண்டு அதோடு நிறுத்திக் கொள்ளவேண்டும். அரசாங்கம் இரண்டு பிள்ளைகளுக்கு மேல் பெறக் கூடாது என்று சட்டம் கொண்டு வரவேண்டும். இரண்டிற்கு மேல் பெறுபவர்களுக்கு அரசாங்க உத்தியோகங்களில் பிரமோசன் கொடுக்கக் கூடாது.

- 22.08.1971 - திருவண்ணாமலைத் திருமண விழாஉரை. விடுதலை - 28.09.1971

# 13.பெற்றோர்கள் நடத்தும் த ிருமணங்கள் ஒழிய வேண்டும்

மேல்நாட்டில் ஒருவனைப் பார்த்து உன் மகளுக்கு எப்போது திருமணம் என்று கேட்டால், ஏன் என்னைக் கேட்கிறாய் - என் மகளைக் கேள் என்பான். உன் மகனுக்கு எப்போது கல்யாணம் என்றால், அவனைக் கேள் என்பான்.

அதற்கு என்ன பொருள் என்றால், திருமணம் என்பது திருமணம் செய்து கொள்ளவேண்டிய ஓர் ஆணோ, ஒரு பெண்ணோ முடிவு செய்து கொள்ளவேண்டிய விஷயம். நம் நாட்டில் என்னவென்றால், திருமணம் என்பது பெற்றோர்கள் பார்த்துச் செய்யவேண்டிய சடங்காகி விட்டது. இது ஒழிந்தாக வேண்டும்.

மணமக்களைப் பொறுத்தவரையில் அவர்கள் கோவிலுக்கோ, குளத்திற்கோ, குப்பைத் தொட்டிக்கோ போகக் கூடாது. வேண்டும் என்றால், வெளி மாநிலங்களுக்கோ வெளி நாட்டிற்கோ சென்று சுற்றிப் பார்த்து உலக அறிவைப் பெருக்கிக் கொள்ளவேண்டும். சிறீரங்கத்திற்கோ, காசிக்கோ சென்றால், எதைப் பார்க்க முடியும்? அந்த அழுக்குருண்டை `சாமியைத் தானே பார்க்க முடியும்? இதனால் `கடுகு அளவு முன்னேற்ற மாவது ஏற்படுமா? என்பதைச் சிந்திக்கவேண்டும்.

14.07.1971 - மாப்படுகைத் திருமண விழா உரை. விடுதலை - 23.07.1971

## 14.நம் பெண்களுக்குத் தாலி எதற்குப் பயன்படுகிறது?

இந்நிகழ்ச்சியானது இதுவரை நம்மிடை நடைபெற்று வந்த கல்யாணம் - விவாகம் - தாராமுகூர்த்தம் என்னும் பெயரால் நடந்து வந்த நிகழ்ச்சிகளுக்கு முற்றிலும் மாறான நிகழ்ச்சியே யாகும். இதுவரையிலும் நடந்து வந்த முறைகள் யாவும் மணமகன் சொன்னது போலக் காட்டுமிராண்டி முறைதான். அதையே பெரும்பாலான மக்கள் நடத்தி வருகின்றனர். அதை மாற்றி மானத்தோடு - பகுத்தறிவோடு, அறிவிற்கேற்ற முறையில் நடத்த வேண்டுமென்று தீர்மானித்தே இம்முறையினை ஏற்பாடு செய்தோம். பழைய முறை, விவாக முறை எதற்காக ஏற்படுத்தப் பட்டது என்பதைச் சிந்திக்க வேண்டும்.

திருமண முறை கல்யாண முறை, கணவன் - மனைவியாக வாழும் முறை தமிழனுக்கு இருந்தது கிடையாது. ஆணும், பெண்ணும் சம உரிமையோடு, நண்பர்களாக, காதலன் - காதலியாக வாழும் முறை தான் இருந்தது. இடையில் பார்ப்பான் வந்து புகுந்த பின்தான் தமிழன் அறிவு இழக்கவும், இதுபோன்ற முறைகள் பார்ப்பானால் புகுத்தப்பட்டது.

நம் வாழ்க்கையில் பார்ப்பானுக்கு நிரந்தர அடிமையாக்க சூத்திரத்தன்மை எப்படிப் புகுத்தப்பட்டதோ அதேபோல, பெண்கள் ஆண்களுக்கு நிபந்தனையற்ற நிரந்தர அடிமை களாக்க புகுத்தப்பட்டதே திருமண முறையாகும். அடுத்து அதன் பலன் என்னவென்றால் பகுத்தறிவுள்ள மனிதனை மடையனாக சிந்தனையற்றவனாக ஆக்க வேண்டுமென்பதற் காகவே இம்முறையானது புகுத்தப்பட்டு விட்டது. மூன்றாவதாக ஜாதி இழிவைப் பற்றி மனிதன் கவலைப்படாமல் பழைமையைக் காப்பாற்ற வேண்டுமென்கிற முறையில் புகுத்தப்பட்டதேயாகும்.

எவ்வளவு பெரிய பணக்காரன் மகளானாலும், அரசன் மகளானாலும், அவளை இன்னொருவனுக்குத் திருமணம் செய்து கொடுத்தால் அவள் அவனுக்கு அடிமைதான். இதையெல்லாம் மாற்றியமைக்க வேண்டுமென்பதற்காக அறிவோடு அவசியத் திற்கு

தேவையானவற்றைக் கொண்டு மனிதன் இழிவு நீங்கும் வகையில் ஏற்பாடு செய்யப்பட்டதே இம்முறையாகும்.

நான் கடவுள் மறுப்புக் கூறுவது மனிதனின் அறிவைத் தூய்மைப்படுத்தி அவனது அறிவைக் கொண்டு எதையும் சிந்திக்க வேண்டும். மனிதனின் அறிவிற்கு சுதந்திரம் கொடுக்க வேண்டும் என்கின்ற காரணத்திற்காகவே கூறுகின்றேன்.

இம்முறையில் இதுவரையில் பதினாயிரக்கணக்கான திருமணங்கள் நடைபெற்றிருக்கின்றன என்றாலும், இதுவரை இருந்த அரசாங்கம் பார்ப்பன அரசாங்கமாகவும், பார்ப்பன அடிமை அரசாங்கமாகவும் இருந்ததனால் இம்முறைத் திருமணங்கள் சட்டப்படிச் செல்லுபடியற்றது என்று வைத்திருந்தது. இப்போது அமைந்திருக்கின்ற தமிழ்நாடு அரசானது பகுத்தறிவாளர் அறிஞர் அண்ணா அவர்களின் ஆட்சியானதால், இதுவரை இம்முறையில் நடைபெற்ற திருமணங்களும், இப்போது நடைபெறும் திருமணங் களும், இனி நடக்க இருக்கும் திருமணங்களும் சட்டப்படிச் செல்லுபடியாகும் என சட்டமியற்றி இருக்கிறது. இம்முறையில் திருமணம் செய்யும் நாம் முதலில் இவ்வரசுக்கு நம் நன்றியினையும், பாராட்டுதலையும் தெரிவிக்க வேண்டியது நம் கடமையாகும்.

நான் சொல்கிற விஷயங்களைப் பொறுமையாக இருந்து கவனியுங்கள். உங்கள் அறிவிற்கு, சிந்தனைக்குச் சரி என்று தோன்றுபவற்றை மட்டும் ஏற்று நடவுங்கள் என்று கேட்டுக் கொள்கிறேன். ஒருவர் சொல்வதை இன்னொருவர் ஒப்புக் கொள்வது என்பது பகுத்தறிவாகாது. எனவே, நான் சொன்னதை உங்கள் அறிவைக் கொண்டு சிந்தியுங்கள். உங்கள் அறிவிற்கு எது சரியென்று படுகின்றதோ அதனை ஏற்று அதன்படி நடந்து கொள்ள முயற்சியுங்கள் என்று கேட்டுக் கொள்கின்றேன்.

இத்திருமண முறை தமிழர்களான நமக்கு இல்லையென்று சொன்னேன். நண்பர்கள் சொன்னது போலப் பார்ப்பான் வந்த பின்தான் நமக்கு இம்முறையானது பார்ப்பானால் ஏற்பாடு செய்யப்பட்டு நம்மிடையே புகுத்தப்பட்டதாகும்.

நேற்று ஒரு புலவன் என்னிடம் பெருமையாகச் சொன்னான்,

“மற்றவனெல்லாம் இலக்கியத்தை வைத்துத் தான் இலக்கணம் செய்தான். ஆனால், தொல்காப்பியன் வாழ்க்கையை வைத்து இலக்கணத்தை அமைத்திருக்கின்றான். இது தொல் காப்பியனுக்குமுள்ள பெரும் சிறப்பாகும்” என எடுத்துக் கூறினான். அந்தத் தொல்காப்பியனே தமிழனுக்குத் திருமண முறை கிடையாது. பார்ப்பானுக்குத்தான் இம்முறை என்பதைப் பல சூத்திரங்கள் மூலம் விளக்கி இருக்கின்றார்.

“மறையோர் தேயத்து மன்றல் எட்டினும்” என்கின்ற சூத்திரத்தின் மூலம் பார்ப்பான், நாட்டிலுள்ள கல்யாண முறை எட்டு என்பதை விளக்கி இருக்கிறார். அடுத்து “பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் அய்யர் யாத்தனர் கரணம் என்ப” மேல் கூறிய முறைகளின்படி திருமணம் செய்து கொண்ட (பார்ப்பான்) மக்களிடையே ஒழுக்கக் கேடும், பொய்யும் அதிகமான பின் பார்ப்பான் சடங்குகளை ஏற்படுத்தினான் என்று குறிப்பிட்டிருக்கிறார். நம் தமிழ்ப் புலவர்கள் 'அய்யர்' என்பது பார்ப்பானைக் குறிப்பதல்ல, அறிவில் சிறந்த வரைக் குறிப்பிடும் சொல் என்று கூறுவார்கள். இதற்குப் பதில் சொல்வது போல, தொல்காப்பியனே இன்னொரு சூத்திரத்தில் “மேலோர் மூவர்க்கும் புணர்ந்த கரணங்கள் கீழோர்க்காகிய காலமும் உண்டே” என்ற சூத்திரத்தின் மூலம் மேல் ஜாதிக்காரர் களுக்காக ஏற்பாடு செய்த சடங்குகள், முறைகள் கீழ் ஜாதிக்காரர் களிடையே புகுத்தப்பட்ட காலமும் உண்டு என்று குறிப்பிட்டுக் காட்டி இருக்கிறார்.

நேற்றுக் கூட எனக்கு ரொம்ப வேதனை; நம் நாட்டின் மந்திரி பூம்புகார் பத்தினிக் கோட்டத்திற்கு அடிக்கல் நாட்டி இருக்கிறார். நம் நாட்டிலிருக்கிற கோடிக்கணக்கான பெண்களில் அவள் ஒருத்திதான் பத்தினி என்றால் மற்ற பெண்கள் எல்லாம் யார்? உன் தாய், என் தாய், உன் தங்கை, என் தங்கை, மற்ற பெண்கள் அனைவரும் பத்தினித் தன்மை அற்ற விபசாரிகளா? இதை மக்கள் சிந்திக்க வேண்டும். எதற்காக ஒருத்தியை மட்டும் பத்தினி என்று புகழ வேண்டு மென்று கேட்கிறேன்.

என்ன காரியம் செய்தாவது நாம் அறிவு பெற வேண்டும். நம் பெண்களுக்கு அறிவைக் கொடுக்க வேண்டும். நம் மக்கள் மூன்று கோடி பேரும் அறிவாளியாக வேண்டும். நம் பெண்களுக்கு முழுச்சுதந்திரம் கொடுக்க வேண்டும் என்பது என் ஆசை.

இத்திருமணங்களைக் கிரிமினலாக்க வேண்டும். இப்போது எப்படிப் பெண்களுக்கு பொட்டுக் கட்டுவது கிரிமினலோ அது போன்று தாலி கட்டுவதைக் கிரிமினலாக்க வேண்டும். இன்னும் கொஞ்சக் காலத்தில் நிச்சயம் திருமணம் கிரிமின லாக்கப்படுமென்று கருதுகின்றேன்.

நம் பெண்களுக்குத் தாலி எதற்குப் பயன்படுகிறது? 100-க்கு 90-தாலி அறுப்பதற்குத்தானே! பெண்ணை "முண்டச்சி" யாக்கவும், சகுனத் தடையாக்கவும், ஆண்கள் பெண்களை மிரட்டவும், அடிமைத்தனத்தை நிலைநிறுத்தவும் தான் பயன்படுகின்றன. ஆணை விட - பெண்ணிற்கு குறைந்த வயது இருக்க வேண்டும். அப்படித்தான் திருமணம் செய்கின்றார்கள். இரண்டு பேருமே 100 வயது வரை வாழ்ந்தாலும் அதின வயதான ஆண் தான் முன்னால் இறப்பான். அப்போது பெண் தாலியை "அறுக்க வேண்டியது" தானே!

இராமன் - சீதை, அரிச்சந்திரன் - சந்திரமதி, கோவலன் - கண்ணகி, திரவுபதை இத்தனை பேருக்கும் ஜாதகம், ஜோசியம், நேரம், காலம், நாள், நட்சத்திரம் எல்லாம் பார்த்துத் தான் திருமணம் செய்தார்கள். இவர்களில் யார் வாழ்வு உயர்ந்த வாழ்வாக இருந்தது? எல்லோரின் வாழ்வும் சீரழிந்த வாழ்வாக அமைந்தது என்று தான் எழுதி வைத்திருக்கின்றான். இதிலிருந்தாவது நம் முட்டாள்கள் இவையெல்லாம் பொய் என்பதை உணரவில்லையே!

நம் மக்கள் நமக்கு முன் நடப்பவற்றைப் பார்க்க வேண்டுமே ஒழிய, பழைமையைப் பார்க்கக் கூடாது. பின்னோக்கிப் பார்க்கக் கூடாது. மற்றவர்கள் அறிவைச் சுதந்திரமாக விட்டுச் சிந்திப்பதால் பல அரிய - அற்புத அதிசயங்களைக் கண்டவண்ணமிருக்கின்றனர். மனிதனுக்கு ஏன் 100-வயது வரம்பு இருக்க வேண்டும். 200-வருடம் வாழக் கூடாது என்றெல்லாம் ஆராய்ந்து வருகின்றார்கள்.

மணமக்கள் வரவிற்குள் செலவிட வேண்டும். கோயில், குளங்களுக்குச் செல்லக் கூடாது. முட்டாள்தனத்தையும், ஒழுக்கக் கேட்டையும் வளர்க்கும் சினிமாவிற்குக் கூடச் செல்லக் கூடாது. அறிவிற்கு ஒவ்வாத முட்டாள்தனமான மூடநம்பிக்கையான காரியங்களைச் செய்யக் கூடாது. இருவரும் நண்பர்களைப் போல் பழக வேண்டும். பெண்கள் ஆண்களுக்கு அடங்கி நடப்பதற்குப் பெரிய காரணம் அவர்கள் வாழ்க்கைக்கேற்ற வருவாயைப் பெறக் கூடிய சக்தி

இல்லாததால் ஆகும். அவளும் நன்கு படித்து ஒரு நல்ல உத்தியோகத்தில் இருந்தால் ஆண் அவளை அடக்கியாளவோ, அடிமையாகவோ கருத மாட்டான்.

10.11.1968 - நடராசன் - யசோதா திருமண உரை. விடுதலை - 15.11.1968

## 15.தாலியை அறுத்தெறியும் வேலையே முதல் வேலை

சகோதரர்களே! தென்னாட்டில் இதுவரை நடந்த சுயமரியாதைக் கல்யாணங்களுக்குள் இதுவே முதன்மையானது என்று சொல்வேன். என்னவெனில் இந்தக் கலியாணத்தில் பெண்ணின் கழுத்தில் கயிறு (தாலி) கட்டவில்லை. மணமக்களைப் பெற்றவர்கள் இருவரும் மிகத் துணிச்சலான சுயமரியாதை வீரர்கள் என்பது அவர்களது உபந்நியாசத்திலிருந்தே பார்க்கலாம். தாலி கட்டுவது ஒழிந்தாலல்லது நமது பெண்கள் சமூகம் சுதந்திரம் பெற முடியவே முடியாது.

பெண்கள் மனிதத்தன்மை அற்றதற்கும் அவர்களது சுயமரியாதை அற்றத்தன்மைக்கும் இந்தப் பாழும் தாலியே அறிகுறியாகும். புருஷர்களின் மிருக சுபாவத்திற்கும் இந்த தாலி கட்டுவதே அறிகுறியாகும். ஆனால் தங்களை ஈனப்பிறவி என்று நினைத்துக் கொண்டிருக்கும் பெண்களுக்கு இந்த வார்த்தை பிடிக்காது தான். இப்போது தாலி கட்டிக் கொண்டிருக்கும் பெண்களுக்குச் சுயமரியாதை உணர்ச்சி வந்திருந்தால் அறுத்தெரியட்டும். அல்லது புருஷர்கள் கழுத்திலும் ஒரு கயிறு கட்ட வேண்டும். தங்களைத் தாங்களே அடிமை என்று நினைத்துக் கொண்டிருக்கின்ற சமூகம், என்றும் உருப்படியாகாது.

நம்மை நாம் சூத்திரர்கள், இந்துக்கள் என்று நினைத்துக் கொண்டிருக்கும் கீழ்மைக் குணமே நம் நாடு அடிமையாய் இருப்பதற்குக் காரணமாயிருப்பது என்பது போலவே பெண்கள் புருஷனுக்குக் கட்டுப்பட்டிருக்க வேண்டும். அதிலும் தாலி கட்டின புருஷனுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும் என்னும் உணர்ச்சிகள் பெண்களை மிருகமாக்கி இருக்கின்றன. ஆதலால், அப்பேர்ப்பட்ட மிருக உணர்ச்சியையும், அடிமை உணர்ச்சி யையும் ஒழிக்க முயற்சித்த இந்த மணமக்களையும், அதற்கு உதவியாயிருந்த பெற்றோர்களையும் நான் மிகப் போற்றுகிறேன்.

பெண்கள் முன்னேற்றத்தில் கவலை உள்ளவர்கள் பெண்களைப் படிக்க வைக்கும்முன் இந்தக் கழுத்துக் கயிற்றை **(**தாலியை**)** அறுத்தெறியும் வேலையையே முக்கியமாய் செய்ய

வேண்டுமென்று சொல்லுவேன். நிற்க, இதுவரை மணமக்களுக்கு ஆசீர்வாதமோ, வாழ்த்தோ என்பது மணமக்கள் நிறைய அதாவது 16-பிள்ளைகள் பெற்க வேண்டு மென்று சொல்வார்கள். ஆனால் நான் மணமக்களுக்குச் சொல்லுவதென்றால் அவர்கள் தயவு செய்து பிள்ளைகள் பெறக்கூடாது என்பதும், மிக்க அவசியமென்று தோன்றினால் ஒன்று அல்லது இரண்டுக்கு மேல் கூடாது என்றும், அதுவும் இன்னும் ஐந்து அல்லது ஆறு வருடம் பொறுத்துத் தான் பெற வேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிறேன்.

அன்றியும், அப்படிப்பெறும் குழந்தைகளையும் தாய் மார்கள் குரங்குக் குட்டிகள் போல் சதா தூக்கிக் கொண்டு திரிந்து போகின்ற இடங்களுக்கெல்லாம் அழைத்துப் போய் அழ வைத்துக் கொண்டு கூட்டமும் நடவாமல், தங்களுக்கும் திருப்தி யில்லாமல் சபையோருக்கும் வெறுப்புத் தோன்றும்படியாய்ச் செய்யாமல் குழந்தைகளை ஆயம்மாள் வைத்து வளர்க்க ஏற்பாடு செய்ய வேண்டும். அவைகளுக்கு ஒழுங்கும் அவசியமான கட்டுப்பாடும் பழகிக் கொடுக்க வேண்டும்.

இந்தக் கூட்டத்தில் நான் பேச முடியாதபடி எத்தனை குழந்தைகள் அழுகின்றது பாருங்கள். அவற்றின் தாயார் முகங்கள் எவ்வளவு வாட்டத்துடன் வெட்கப்படுகிறது பாருங்கள். அந்தத் தாய்மாரும், தகப்பன்மாரும் இந்தக் கூட்டத்தில் ஒருவரை யொருவர் பார்த்து வெறுப்பதைத் தவிர அவர்களுக்கு இங்கு வேறு வேலையே இல்லாமல் இருக்கின்றது. இன்பமும், அன்பும் என்பது சுதந்திரத்தோடு இருக்க வேண்டுமேயல்லாது நிபந்தனை யோடும், தனக்கு இஷ்டமில்லாத சௌகரியமில்லாத கஷ்டத்தைச் சகித்துக் கொண்டு இருப்பதாய் இருக்கவே முடியாது. ஆகவே, இப்போதைய குழந்தை இன்பம் என்பது ஒருக்காலமும் உண்மையான இன்பமாகாது. ஆகையால் அவைகளை மாற்றிவிட வேண்டும்.

தவிர, அதிக நகை போடாமலும், தாலி கட்டாமலும், மூடச்சடங்குகள் இல்லாமலும் மாத்திரம் நடைபெற்ற திருமணம் சுயமரியாதைத் திருமணமாகி விடாது.

பெண்ணின் பெற்றோர் இப்பெண்ணுக்கு தங்கள் சொத்தில் ஒரு பாகம் பங்கிட்டு கொடுக்க வேண்டும். புருஷர் களையும் போலவே பெண்களுக்கும் சொத்து உரிமை உண்டு, தொழில் உரிமை உண்டு,

என்கின்ற கொள்கை ஏற்படா விட்டால் எப்படி அவர்கள் சுயமரியாதை உடையவர் களாவார்கள்? ஆகையால் அவர்களுக்கு சொத்துரிமையும் அவசியமானதாகும்.

தவிர, பெண்களுக்கு இப்போது பொது நல சேவை என்னவென்றால் எப்படியாவது ஒவ்வொரு விதவையையும் ஒவ்வொரு புருஷனுடன் வாழச் செய்ய வேண்டும். அதுவே அவர்கள் இப்போது செய்ய வேண்டியது.

தவிர பெண்களும் புருஷர்களைப் போலவே தினமுமோ அல்லது வாரத்திற்கு ஒன்று இரண்டு நாளோ ஒரு பொது இடத்தில் கூடி மகிழ்ச்சியாய் பேசி விளையாட வேண்டும். பத்திரிகைகளைப் படிக்க வேண்டும். படிக்காத பெண்களுக்குப் படித்தவர்கள் படித்துக் காட்ட வேண்டும்.

வீட்டு வேலை செய்வது தான் தங்கள் கடமை என்பதை மறந்து விட வேண்டும். புருஷனுக்கு தலைவியாய் இருப்பதும், குடும்பத்திற்கு எஜமானியாய் இருப்பதும் தங்கள் கடமை என்று நினைத்து அதற்குத் தகுந்தபடி நடந்து கொள்ள வேண்டும். இந்த உணர்ச்சியோடேயே பெண்மக்களை வளர்த்து அவர்களுக்குத் தக்க பயிற்சி கொடுக்க வேண்டும்.

10.07.1930 - விருதுநகர் மணவிழா உரை. குடி அரசு -13.07.1930

# 16.மிஸ்ஸஸ்................என்ற முறை ஒழிய வேண்டும்

இந்நிகழ்ச்சி ஒரு சமுதாய வாழ்வு நிகழ்ச்சி என்றாலும் ஒரு புரட்சிகரமான மாறுதல் நிகழ்ச்சியாகும். இதுவரை நம்மிடையே நடைபெற்று வந்த நிகழ்ச்சிக்கு முற்றிலும் மாறாக - புரட்சிகரமான மாறுதலோடு நடைபெறும் நிகழ்ச்சியாகும். இதுவரை இந்நிகழ்ச்சியானது நம்மிடையே கல்யாணம், விவாகம், தாரா முகூர்த்தம், கன்னிகா தானம் என்னும் பெயரால் நடைபெற்று வந்தவையாகும்.

இந்நிகழ்ச்சியை மாற்றிப் புதிய முறையில் ஏற்பாடு செய்ய வேண்டிய அவசியம் ஏன் வந்தது என்றால், பழைய முறையில் பெண்களை முதலாவது ஆண்களுக்கு நிரந்தர அடிமையாக்குவது, இரண்டாவது மனிதர்களை மடையர்களாக ஆக்குவது, மூன்றாவது ஜாதி இழிவை நிலைநிறுத்துவது என்கின்றவற்றை அடிப்படையாக வைத்து நடத்தப்பட்டு வந்தவையேயாகும் என்பதற்காகத் தான் இம்முறை தோற்றுவிக்கப்பட்டதேயாகும்.

பெண்கள் ஏன் ஆண்களுக்கு நிரந்தர - நிபந்தனை அற்ற அடிமையாக இருக்க வேண்டும்? மனிதன் ஏன் மடையனாக, காட்டுமிராண்டியாக, இழிமகனாக இருக்க வேண்டும்? என்கின்ற எண்ணம் எவருக்கும் ஏற்படவில்லை.

நம் நாட்டில் தோன்றிய மகான், மகாத்மா, தெய்விக சக்தி பொருந்தியவர்கள் என்பவர்கள் அனைவரும் இம்முறையை வலியுறுத்தினார்களே தவிர, இம்முறையானது ஒழிக்கப்பட்டுப் பெண்கள் சுதந்திரமாக வாழ வேண்டும்; மனிதன் இழிவற்று - மானத்தோடு - அறிவு பெற்று வாழ வேண்டுமென்று எவரும் தொண்டாற்றவில்லை.

பெண்ணடிமையைப் பற்றி ஆண்கள் தான் கவலைப்பட வில்லை என்றால், பெண்களும் தாங்கள் அடிமையாக இருக்கின்றோம், இந்த அடிமைத் தன்மையிலிருந்து விடுதலை பெற்று சுதந்திரமாக வாழ

வேண்டுமென்று கருதவில்லை. தங்கள் அடிமைத் தன்மை அவர்களுக்குத் தெரியாமலே இருந்தது.

இந்தியாவிலேயே பெண்கள் விடுதலை பெற வேண்டும் என்று தொண்டாற்றக் கூடியது சுயமரியாதை இயக்கம் ஒன்று தானாகும். கடந்த 40- ஆண்களுக்கு மேலாகப் பெண்களின் விடுதலையை முக்கிய குறிக்கோளாகக் கொண்டு அதன் காரணமாகவே இம்முறைத் திருமணத்தை ஏற்பாடு செய்து மக்களிடையே பரப்பிக் கொண்டு வருகின்றது.

மேலும் திருமணம் என்றால், மனிதன் கடவுள், மதம், ஜாதி, சாஸ்திரம் இவற்றைப் பார்க்க வேண்டும். அடுத்து ஜோசியம், நேரம், சகுனம் என்று முட்டாள்தனமான தேவையற்றவை யெல்லாம் பார்த்துத் தனது அறிவை மனிதன் இழந்து மடையனாக காட்டுமிராண்டியாக ஆகின்றான்.

இம்முறையில் பகுத்தறிவுத் திருமணங்கள் கடந்த 40, 45- ஆண்டுகாலமாக நடைபெற்று வந்தும், இதுவரை இம்முறைத் திருமணங்கள் சட்டப்படிச் செல்லுபடியற்றதாக இருந்தது. இன்றைய அரசு பகுத்தறிவுக் கொள்கையை உடைய அரசானதால் இம்முறைத் திருமணங்கள் சட்டப்படிச் செல்லுமென்ற சட்டம் இயற்றி உள்ளது.

அதற்காக நாம் அதனைப் பாராட்டுவதோடு நமது நன்றியினையும் அரசுக்குத் தெரிவித்துக் கொள்வது நம் கடமையாகும். மனிதனின் அறிவை மதத்தின்படி, சாஸ்திரத் தின்படி என்று அடக்கி வைத்ததன் காரணமாக மனிதனின் அறிவானது பயன்பட முடியாமல் போய்விட்டது.

கடவுள் - மதம் - சாஸ்திரம் - நேரம் - சகுனம் பார்த்துச் செய்த திருமணத்திற்கும், இவற்றைப் பார்க்காமல் செய்யப்படுவ தற்கும் உள்ள கேடு இன்னது என்று எவரும் சொல்ல முடியாது. பொதுவாகத் திருமணம் என்றால் பெண்ணை விட ஆணுக்கு வயது அதிகமாகப் பார்த்துத் திருமணம் செய்வார்கள்.

மனித ஆயுள் வரை இருவருமே வாழ்கின்றார்கள் என்று வைத்துக் கொண்டாலும், முதலில் சாவது ஆணாகத்தான் இருப்பான்.

காரணம் அதிக வயதுடையவனாக இருப்பதால் அவன் முதலில் சாகவும், பெண் விதவையாகி அதன்பின் சாகவுமான நிலைமை இருக்கிறது. உலகத்திலேயே இந்தியாவில் தான் விதவைகள் தொகை அதிகமாகும். சகுனம், ஜோசியம், நேரம், நட்சத்திரம் என்பதெல்லாம் மனித சமுதாயத்தில் உழைக்காமல் வயிறு வளர்க்க வேண்டும் என்றிருக்கின்ற பார்ப்பனர்களால் ஏற்பாடு செய்யப்பட்டவையே யாகும். இன்னும் சொல்லப் போனால் தமிழனுக்கு இப்படி ஒருமுறை இருந்தது என்றே சொல்ல முடியாது. தமிழில் இம்முறையினைக் குறிப்பிட்டுக் காட்டக் கூடிய தமிழ்ச் சொல் எதுவுமே கிடையாது.

நம் இலக்கியங்கள் என்பவை அனைத்துமே பெண்ணடிமையை வலியுறுத்தக் கூடியவையாகும். மனு தர்மத்தில் எப்படி சூத்திரன் கடவுளைத் தொழக் கூடாது, பார்ப்பானைத் தான் தொழ வேண்டும், பார்ப்பானை விட்டுக் கடவுளைத் தொழுதால் அவன் கொல்லப்பட வேண்டும் என்றிருக்கிறதோடு, அதுபோலத் திருக்குறளில் பெண் தன் கணவனைத் தான் தொழ வேண்டும்.

கணவனை விட்டுக் கடவுளைத் தொழுதால் நரகத்திற்குப் போக வேண்டும் என்றிருக்கிறது. இன்னும் நம் இலக்கியங்கள் என்பவை - நீதிநூல் என்பவை பெண்களை இழிவுபடுத்துவதற்கே இருக்கின்றன. பெண் என்றால் அச்சம், நாணம், மடம், பயிர்ப்புள்ளவர்களாக இருக்க வேண்டுமென்று தான் சொல்கின்றனவே தவிர, சுதந்திரத்தோடு - அறிவோடு வாழ வேண்டுமென்று சொல்லக்கூடியன எதுவுமே கிடையாது. தமிழகத்திலே இருக்கிற இலக்கியங்களும், புராணங்களும், இதிகாசங்களும் பெண்ணடிமையை வலியுறுத்தக் கூடியவை யாகவே இருக்கின்றன.

நம்மிலே ஓர் ஆணும், பெண்ணும் அதாவது தாயும், தந்தையும் சேர்ந்துதான் பிள்ளை பெறுகின்றார்கள். ஆனால் அந்தப் பிள்ளையைக் குறிப்பிடும்போது ஆணின் பெயரைச் சொல்லி அவன் மகன் என்று சொல்கிறார்களே தவிர, பெண்ணின் பெயரைச் சொல்லி அவளுடைய மகன் - மகள் என்று சொல்லுவது கிடையாது.

தந்தை என்பது ஒரு உத்தேசமே தவிர, பிரத்தியட்சமாகப் பார்க்கும் போது தாய் பத்து மாதம் சுமந்து குழந்தையைப் பெற்றெடுக்கின்றாள். ஆனால் அவள் பெயரைக் குறிப்பிடுவது

கிடையாது. மேல் நாடுகளிலும் திருமணமானால் அப் பெண்ணைக் கணவன் பெயரைச் சொல்லி மிஸ்ஸஸ் இன்னார் என்று தான் சொல்வார்களே தவிர, பெண்ணின் பெயரைச் சொல்லி ஆணைக் (கணவனைக்) குறிப்பிடுவது இல்லை. அப்படிப் பெண்கள் சமுதாயமானது உலகில் ஒவ்வொரு வகையில் அடிமைப் படுத்தப்பட்டிருக்கிறது. இவை யாவும் ஒழிய வேண்டுமென்பதே நம் குறிக்கோளாகும்.

தாய்மார்கள் தங்களின் பெண்களை 20-வயது வரைப் படிக்க வைக்க வேண்டும். இப்போது கல்வி இலவசமானது போல, பெண்கள் சமுதாயத்திலே சாப்பாடு போட்டுப் படிப்பு என்றாகி விடும். இப்போது ஆதிதிராவிட சமுதாயத்தைச் சார்ந்தவர் களுக்கு, எப்படி அரசாங்கம் உணவு அளித்துச் சலுகைக் காட்டு கிறதோ அப்படிப் பெண் சமுதாயத்திற்கும் சலுகை காட்டக் கூடிய நிலைமை ஏற்பட்டே தீரும்.

நம் அறிவிற்குக் கேடானவற்றை மாற்றுவதற்கும் சமுதாயத்தில் ஒரு பாலுக்கு ஒரு நீதி என்பதை மாற்றுவதற்காகவுமே இந்நிகழ்ச்சியானது தோற்றுவிக்கப்பட்டதே யாகும்.

கடவுள் - மதம் - சாஸ்திர நம்பிக்கைகளை ஒழித்தால் தான் ஜாதி ஒழியும். இவை இருக்கிறவரை நம் ஜாதி இழிவு ஒழியாது. மனிதன் கோயிலுக்குப் போவதையும் சாம்பல் - செம்மண் அடிப்பதையும் நிறுத்திக் கொள்ள வேண்டும். இவை தான் நம்மை இழி மக்களாக, சூத்திரனாக வைத்திருப்பவையாகும். மனிதனை மடையனாக்கக் கூடிய பிரசாரங்கள் தான் அதிகமிருக்கின்றனவே ஒழிய, அறிவு வளர்க்கக் கூடிய பிரசாரங்கள் சாதனங்கள் எதுவும் நம்மிடையே இல்லை.

மணமக்கள் தங்கள் வாழ்க்கையில் பகுத்தறிவோடும், சிக்கனமாக வரவிற்கடங்கி செலவு செய்து வாழ வேண்டும். ஆடம்பரமாக வேண்டுமென்ற எண்ணம் இருக்கக் கூடாது. எளிமையான - எளிய வாழ்வு வாழ வேண்டும். தங்களால் இயன்ற உதவிகளைச் சமுதாயத்திற்குச் செய்ய வேண்டும். கூடியவரை குழந்தை இல்லாமலிருப்பது நல்லது. முடியவில்லை என்றால் ஒன்றிரண்டோடு நிறுத்திக் கொள்ள வேண்டும். கண்டிப்பாகக் கோயிலுக்குப் போகக் கூடாது.

## 17. கணவன் - மனைவி முறை ஜாதி முறையைவிடக் கேடானதாகும்

இத்திருமணத்தில் மணமகனாக இருக்கும் கலியமூர்த்தி, சுயமரியாதை இயக்கத்திற்குச் செல்லப்பிள்ளை ஆவார். இயக்கக் காரியங்களுக்கு நாம் சொல்லாமலே நம் காரியப் பணிகளை முன்னிலையில் நின்று காரியமாற்றக் கூடியவர். மணமகளின் தந்தை இயக்கத்திற்கு மிகத் தொண்டாற்றியவர். தொண்டாற்று பவராவார்.

மணமகன் அரசாங்கப் பணியில் உள்ளவர் இனி அதிகமாக இயக்கக் காரியங்களில் ஈடுபடாமல் ஆதரவு தருவதோடு நிறுத்திக் கொள்வது நலமென்றே கருதுகின்றேன். ஏன் இப்படிச் சொல்கிறே னென்றால், எங்காவது வேறு உத்தியோகத்தில் பார்ப்பான் இருப்பான். அவன் இவர் இயக்கக் காரியத்தில் ஈடுபடுவது தெரிந்தால் எப்படியாவது எந்தக் குறையையாவது, குற்றத்தை யாவது சொல்லி வேலையிலிருந்து நீக்க முயற்சிப்பான். அதற்கு இடமில்லாமல் நடந்து கொள்ள வேண்டும்.

பொதுவாக நம் நாட்டின் திருமணமென்றால் பெண்ணா யிருந்தால் வேலைக்காரி, ஆணாயிருந்தால் எஜமானன். இத்தத்துவப்படிதான் உலகமெங்கும் திருமணம் நடைபெறுகிறது.

சாதாரணமாக நம் நாட்டில் கல்யாணமில்லாமல் ஆண்கள் சமாளித்துக் கொள்ளலாம். பெண்களால் முடியாது. ஏன் பெண்களால் முடியாது என்றால், என்ன இவ்வளவு வயதாச்சு? இன்னும் கல்யாணம் பண்ணமாலிருக்கிறீர்கள் என்று கண்டவ ரெல்லாம் கேட்பார்கள். அதற்காகவாவது கல்யாணம் செய்ய வேண்டியவர்களாகிறார்கள். பெண்கள் அடிமைகளாகத் தான் இருக்க வேண்டும் என்பதுதான், நம் கடவுள் - மதம் - சாஸ்திரங்கள் எல்லாமாகும்.

அடுத்து மக்களைப் பல சடங்கு களைச் செய்ய செய்து அதன் மூலம் மடையர்களாக்குவது. மற்றும் ஜோசியம் - ஜாதகம் - பொருத்தம் பார்ப்பது - சாமி கேட்பது எல்லாமே மனிதனை மடையனாக்கப் பார்ப்பானால் ஏற்பாடு செய்யப்பட்டதே ஆகும். தமிழனுக்கு இந்த முறையில் எதுவுமே சம்பந்தம் கிடையாது. இதுபோன்று முறை

இருந்தது என்பதற்குத் தமிழில் எந்த இலக்கியத்திலுமே சான்று இல்லை.

ஜாதி முறையை விடக் கேடு இந்தக் கணவன் மனைவி முறையாகும் பறையன், சக்கிலிக் கூட மேல்ஜாதிக்காரன் சொல்வதைக் கேட்காமல், "நீ போ சாமி என்னால் முடியாது" என்று சொல்லி விட்டுப் போய் விடலாம். ஆனால் ஒருத்தன் மனைவி அதுபோலச் சொல்ல முடியாது. சொன்னால் கணவன் அவளைக் கொலை கூடச் செய்வான். இதுபோல் நடக்கின்றன. தினசரி பத்திரிகையில் நாள் தவறாமல் எங்காவது ஒரு நிகழ்ச்சி பெண் - ஆனால் கொலை செய்யப்படும் செய்தி வந்த வண்ணமிருக்கிறது. இதுவரை பழைய முறையில் செய்யப்பட்டதால் என்ன பலனடைந்து விட்டார்கள்.

மற்ற மக்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்ப தற்காக எடுத்துக்காட்டாக நடந்து கொண்டவர்கள் என்று சொல்லப்படும் சீதை, கண்ணகி, திரவுபதை இவர்கள் கதைகளைப் பார்த்தாலே தெரியுமே. பெரிய ஜோசியனை எல்லாம் வைத்து நேரம் காலம் பொருத்தம் பார்த்துச் செய்யப்பட்டது தானே இவர்கள் திருமணம். இவர்கள் என்ன சிறந்த வாழ்வு வாழ்ந்து விட்டனர். இதனை மக்கள் சிந்திக்க வேண்டும்.

மனித சமுதாய வாழ்வே முட்டாள்தனத்தை அடிப்படை யாகக் கொண்டது தான். ஆடு, மாடு, நாய், மலம் இவற்றை விட இழிவானதாகக் கருதப்படுகிறது மனித சமுதாயம். நாயைத் தொடலாம் - ஆடு, மாடு, நாய், மலம் இவற்றைத் தொடலாம். ஆனால் ஒரு மனிதனைத் தொட்டால், அவன் கட்டியத் துணியோடு குளிக்க வேண்டுமென்பது ஜாதித் தன்மையாக இருக்கிறது.

இதைவிடக் கொடுமை ஒரு பெண் ஓர் ஆணைத் தொட்டால் அவளைக் கொல்ல வேண்டும் என்கிறான். கொல்கிறான். பெண்ணை அவ்வளவு இழிவாக்கி, அடிமையாக்கி ஆண் தனக்கே உரிமைப் பொருளாக்கி வைத்திருப்பதே காரணமாகும். அதன் அறிகுறி தான் இந்தத் தாலியாகும். இது பெண்ணை அடிமையாக்குவதன் சின்னமாகவும், முண்டச்சி யாக்கும் சின்னமாகவும் அணியப்படுவதே யாகும். அந்தத் தன்மையை அடிப்படையாகக் கொண்ட தாலி அணிவதைத் தவிர்த்தது அறிவுடைமையாகும். இதனால் எந்தக் கேடும் ஏற்படாது. ஏற்படவுமில்லை. பலர் தாலி அணியாமலே நல்வாழ்வு வாழ்கின்றனர்.

வாழ்த்துக் கூறுவதால் எந்தப் பலனும் கிடையாது. ஒரு சந்தோஷத்தைத் தெரிவிப்பதற்கான முறையே தவிர, வேறில்லை. வெள்ளைக்காரன் நான் ஆசைப்படுகிறேன் - விரும்புகிறேன் என்று தான் சொல்வான். இந்த வாழ்த்துக் கூறுவதே பார்ப்பான் நம்மை ஏமாற்றப் பயன்படுத்தியதே தவிர, பார்ப்பானால் ஏற்பாடு செய்யப்பட்டதே தவிர மற்றப்படி அதனால் எந்தப் பயனும் இல்லை.

மணமக்கள் நண்பர்களைப் போலப் பழக வேண்டும். வரவிற்கு மேல் செலவிடக் கூடாது. பட்டினிக் கிடந்தாலும், கடன்காரனாகக் கூடாது. ஆடம்பரமாகத் தங்களைத் காட்டிக் கொள்ளாமல் எளிய வாழ்வு வாழ வேண்டும். சினிமா, கோயில் இவற்றிற்குச் செல்லக் கூடாது. நெய்வேலி - பம்பாய் போன்ற தொழில் நகரங்களுக்குச் சென்று தொழிற்சாலைகளைப் பார்க்க வேண்டும்.

பிள்ளை பெறாமலே பார்த்துக் கொள்ள வேண்டும். மீறினால் ஒன்று அல்லது இரண்டோடு நிறுத்திக் கொள்ள வேண்டும். குறவனுக்கு எப்படித் திருடுவதில் அவமான மில்லையோ, அதுபோல பிள்ளைக் குட்டிக்காரன் இலஞ்சம் வாங்குவதிலும் - பல்லைக் காட்டிக் கெஞ்சுவதிலும் அவமானப் படுவது கிடையாது. நீ பணக்காரனாக வேண்டும் என்று சொல்வதற்குப் பதில், நீ நாசமாகப் போ என்று சொல்வதற்குப் பதில் பத்து பன்னிரண்டு பிள்ளைகளைப் பெற்றுக் கொள் என்று சொன்னாலே போதும். அப்பிள்ளைகளே அவனை நாசமாக்கி விடும்.

14.07.1968 மாயவரம் கலியமூர்த்தி - திருமண விழா உரை. விடுதலை - 13.08.1968

வெற்றிச்செல்வி

# 18.இல்லறம் என்பது தொல்லையே!

மனித சமுதாயத்திற்கு இருந்துவரும் தொல்லை என்பவற்றில் மாபெரும் தொல்லையும், மற்றெல்லா தொல்லை களுக்கும் பிறப்பிடமாவதானது மனிதன் இல்லறம் நடத்துவது, சம்சாரம் நடத்துவது, குடும்பம் நடத்துவது, குடித்தனம் நடத்துவது என்பன போன்ற சொற்களின் பொருளான வாழ்க்கை நடத்துவது தான்.

ஆணுக்குப் பெண் தேவையும், பெண்ணுக்கு ஆண் தேவையும் வெறும் காம இச்சைக்குத்தானே ஒழிய, குடும்பம் நடத்துவதற்கு அல்ல என்பதை மனிதன் உணர வேண்டும்.

இந்தக் "குடும்பம் நடத்துகிறது, இல்லறம் நடத்துகிறது" என்கின்ற தொல்லை மனிதனுக்கு ஏற்பட்டதற்கு அடிப்படைக் காரணம் சொத்துரிமை ஏற்பட்டது தான்.

இந்தச் சொத்துரிமையின் தொல்லை குடும்பம் மாத்திர மல்ல, அதைத் தேடுவதிலும், பராமரித்துப் பாதுகாப்பதிலும் உள்ள தொல்லை மனிதனின் பெரும்பாலான நேரத்தை ஈடுபடுத்தி, பெரும் கவலையில் மூழ்கி இருக்க வேண்டியதாகி விடுகிறது. மனித ஜீவனின் வாழ்வு இதற்குத் தானா பயன்பட வேண்டும்?

இப்படி நான் சொல்வது 'வாய்ப் பேச்சு வேதாந்த ஞானம்' என்று சொல்லப்படுவதில்லை. அனுபவத்தின் பேரால், ஆராய்ச்சியின் பேரால், மனித சமுதாய நல்வாழ்வுக்கும், நிம்மதியான, கவலையற்றத் தன்மைக்கும் மனிதஜீவ வளர்ச்சிக்குமாகவே சொல்லுவதாகும்.

மற்றும் மனிதன் இதை நான் சொல்லுவதை ஏற்பதற்கு ஏதோ கஷ்டமிருப்பதாகவும், ஏற்கனவே முடியாது என்றும் யாரும் கருத வேண்டியதில்லை. இல்லறம் வேண்டாம்; குடும்ப வாழ்க்கை வேண்டாம் என்பதற்கு மனிதன் ஆணோ, பெண்ணோ எந்தவிதமான கஷ்டமும் எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை. ஒரே ஒரு காரியம் செய்யாமல் இருந்தால் அதுவே போதும்.

அ தா வ து மனிதன் கல்யாணம், திருமணம், வாழ்க்கைத் துணை ஒப்பந்தம் என்பவற்றில் எதையும் செய்து கொள்ளாமல் இருந்தால் அதுவே போதும். அதுதான் மனிதனுக்கு விடுதலை - 'மோட்சம்' என்பது.

அதனால் குடும்பமே ஏற்படாது. தேவையுமிருக்காது. மனிதனுக்கு (ஆணுக்கோ, பெண்ணுக்கோ) திருமணம் செய்து கொள்ளாவிட்டால் தொல்லையோ, கவலையோ கூட இருக்காது. இருக்க இடமும் ஏற்படாது.

இந்தப்படி இருக்க முடியுமா? என்று கேட்கலாம். முடியும் முடிந்தும் இருக்கிறது. சில நாடுகளில் சமீபகாலம் வரையில் பழக்கத்தில் அனுபவத்தில் இருந்தும் வந்திருக்கிறது. ஓர் அளவுக்கு இருந்தும் வருகிறது.

எங்கே என்றால் மலையாளத்தில் - நாயர் வகுப்பில், 'சம்பந்த முறை' என்ற தத்துவத்தில் இருந்து வந்தது வருகிறது.

ஒரு பெண் எந்த நேரத்தில் வேண்டுமானாலும் தனது காதலனை (சம்பந்தக்காரனை) வரவேண்டாம் என்று சொல்லி விடலாம். அதுபோலவே ஓர் ஆண் எந்த நேரத்தில் வேண்டு மானாலும் தன் காதலியிடம் (சம்பந்தக்காரியிடம்) போக்கு வரத்தை நிறுத்திக் கொள்ளலாம்.

இவர்கள் இருவருக்குள் குடும்பத் தொல்லையோ, அதாவது பிள்ளைக்குட்டி சம்பந்தமான ஜீவனாம்சத் தகராறோ, சொத்து தகராறோ ஏற்படுவதில்லை. ஏற்படவும் வழி இல்லை.

இந்த நிலை அங்கு வெகு சகஜமாக இருந்து வந்தது; சில குடும்பங்களில் இருந்து வருகிறது. சுருக்கமாய்ச் சொல்ல வேண்டு மானால் அங்கு (மலையாளத்தில்) மக்களுக்கு ஆணுக்கும், பெண்ணுக்கும் அரசாங்க ஆதாரங்களிலும், சமுதாய வாழ்க்கை ஆதாரங்களிலும் தகப்பன் பெயருக்குக் கலமே இல்லை. ஒருவருக் கொருவர் கேட்கவும் மாட்டார்கள். ஆதாரங்களில் குறிப்பதும் இல்லை. திதி செய்தாலும் தகப்பன் பேர் யாரும் சொல்லுவதில்லை.

இதன் பயனாக அவர்களது (நாயர்களுடைய) நாணயம், நேர்மை, ஒழுக்கம் மற்ற நாட்டார்களை விடச் சிறப்பானது; மேலானது என்று சொல்லலாம். இது எனது 60, 70-ஆண்டுகளுக்கு முற்பட்ட அனுபவமாகும்.

இது மாத்திரமல்ல; அங்கு இந்தக் குடும்பத் தொல்லை காரணமாக ஒரு பெண்ணுக்கு 2, 3 கணவன்மார் உண்டு. இவர்கள் இந்தக் கணவர்களின் சகோதரர்களாகவும் இருப்பார்கள். அல்லது ஒருவருக்கொருவர் நெருங்கிய உறவினர்களாகவும் இருப்பார்கள். இதன் பலன் என்னவென்றால் குடும்பத் தொல்லை, இல்லற பாரம் இல்லை என்பதுதான். இருந்தால் 'மனசாட்சி'க்கு விரோதமாய் நடந்துதான் ஆக வேண்டும்.

மனிதன் படிக்க வேண்டும். வருவாய்க்கு ஏற்ற தொழில் தெரிந்திருக்க வேண்டும். இதற்கு தாயார் பொறுப்பெடுத்துக் கொள்ள வேண்டும். ஆண்கள் சாப்பாடு உணவு விடுதிகளில் வைத்துக் கொள்ள வேண்டும்.

ஆண்கள் இருப்பிடமாக வருவாய்க்கேற்ப லைன் - வீடுகளில் இரண்டு அறை, அல்லது மூன்று அறைகளை வாடகைக்கு எடுத்துக் கொள்ள வேண்டும். பெண்களும் இப்படியே தான் இருக்க வேண்டும். பிள்ளைகள் பெறுவதை இரண்டுக்கு மேல் இல்லாமல் கட்டுப்பாடு செய்து கொள்ள வேண்டும். பிள்ளைகளுக்குப் படிப்பு (எஸ்.எஸ்.எல்.சி) வரை சர்க்கார் கொடுத்து விடுகிறார்கள். பணம் கையில் மீதி இருக்கு மானால் பாங்கியில் போட்டு விட வேண்டும். காதலனிடத்தில் காதலுக்கு ஆக பணம் பெறக் கூடாது. தமது இஷ்டத்துக்குக் கட்டுப்படுத்த வேண்டும் ஆணை.

இந்த நிலையை 1932 இல் நான் மேல் நாடுகள் பலவற்றில் நேரில் பார்த்தேன். அதாவது பலருக்கு பாஸ்போர்ட் லவ்வர் - லவ்லேடி தான். குடும்பத்துடன் இருப்பவர்களும் உணவு விடுதியில் உணவு கொள்ளுவதையும், வாடகை அறைகளில் தனித்தனியாக வாழ்வதையும் பார்த்தேன்.

நம்மில் உள்ள பெரும் தொல்லைக்குக் காரணம், காதலை இரண்டாகப் பிரித்து விட்டோம். சுதந்திரக் காதல் என்றும், அடிமைக்

காதல் என்றும் பிரித்து விட்டோம். அதாவது ‘களவு’ என்றும், ‘கற்பு’ என்றும். இந்தக் கற்பு, அடிமைக் காதல் ஆரியர்களால் ஏற்பட்டதே ஒழிய, நமக்கு இருந்திருக்கவே முடியாது. ஏனென்றால், அந்த அடிமைக் காதல் முறை நம்முடைய தாகவே தோன்றவில்லை. ஏனெனில், நமக்கு அந்த அடிமைக் காதலுக்கு அவசியமே இல்லை. ஆண், பெண் சரிநிகர் சமானமாக இருந்தவர்கள். இதுதான் இயற்கையும் சுதந்திரமாகும்.

ஆகவே, பெண்ணை அடிமைப்படுத்துவது தான் கற்பு அடிமைக் காதலாகி விட்டது. இதனால் ஆண், பெண் இருபாலருக்கும் தொல்லை, துன்பம். மனித சமுதாயத்தையே உழவன் கை மாடுகள் போல ஆக்கிவிட்டது.

ஆகவே, திருமணம் என்பது ஒரு பெண்ணைச் சுவாதீனமற்ற அடிமையாக்குவது மாத்திரமல்லாமல், ஓர் ஆணும் இல்லற முறைக்கு - கவலைக்கு அடிமையாகிறான், தன்னைப் பலி கொடுத்து விடுகிறான்.

இதனால் மனித வளர்ச்சி, உலக வளர்ச்சி பெருமளவிற்குத் தடைப்பட்டு விடுகிறது. ஜீவனும், துக்க சாகரத்தில் அழுந்திக் கிடக்க நேரிடுகிறது.

நான் சொல்லுகிறேன், இந்தச் சுதந்திரத்திற்குப் பெண்கள் இசைய மாட்டார்கள். அவர்களுக்கு ஓர் எஜமான் இல்லா விட்டால் ஆடை நழுவுவது போன்ற உணர்ச்சி இருக்கும். ஆனால், ஆண்கள் கண்டிப்பாய்த் திருமணம், வாழ்க்கைத் துணை ஒப்பந்தம் செய்து கொள்ளக் கூடாது.

ஆண்கள் மாத்திரம் நன்றாகப் படித்து, வாழ்க்கைக்குப் போதுமான நல்ல வருவாயுடன் வாழ்ந்தால், அதற்கேற்றபடி பெண்கள் போட்டிப் போட்டுக் கொண்டு வந்து சுகம் கொடுத்து, சுகம் பெற்றுக் கொண்டு போவார்கள். ஒரு 10, 20 பேரிடையில் இப்பழக்கம் ஏற்பட்டால் இது பரவிவிடும். யாரும் தவறாகவும் கொள்ள மாட்டார்கள்.

சுயநலமற்ற பொதுத் தொண்டுக்கு ஏராளமான மக்கள் ஏற்படுவார்கள். மக்களுக்கும் நிபந்தனையற்ற பகுத்தறிவு வளர்ச்சி ஏற்பட முடியும். இதனால் ஆயுள் வளரும்.

நாட்டில் மக்களிடம் சமுதாயத்தில், ஒழுக்கமும், நாணயமும், நேர்மையும் பரவும். சாகும் போதும் கவலையற்றுச் சாவான்.

இன்று மக்களிடையில் காணப்படும் அல்ப சுபாவ மெல்லாம் மறைந்து ஒழியும். அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு சமுதாயமாகிய பெண்கள் சமுதாயம் பேரறிஞர் சமுதாயமாக உயரும். விஞ்ஞான தத்துவப்படிப் பார்த்தால் இல்வாழ்வில் பெண் மாத்திரம் அடிமை அல்ல. ஆணும் அடிமையே ஆவான்.

இல்லறம் என்றாலே சுதந்திரமற்ற வாழ்வு என்பதுதான் தத்துவம்.

-ஞாயிறு மலர், விடுதலை - 02.03.1969

# 19.திருமண அமைப்பைச் சட்டப்படி குற்றமாக்க வேண்டும்

நான் மனித சமுதாயத்தில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்த வேண்டுமென்று ஆசைப்படுபவன்; நம் சமுதாயத்தைத் திருத்த வேண்டுமென்று பாடுபடுபவன்.

உலகிலுள்ள மற்ற ஜீவராசிகளின் அறிவை விட மனிதனின் அறிவிற்குப் பேதம், உயர்வு இருக்கிறது. மற்ற ஜீவனை விட உயர்ந்த அறிவுப் பெற்ற மற்ற மனிதன், மற்ற ஜீவராசிகளை விட எதில் உயர்ந்தவனாக, கவலையற்றவனாக இருக்கிறான் என்று நான் சிந்திக்கும் போது - மனிதன் மற்ற ஜீவராசிகளை விடக் கீழானவ னாகவே இருக்கின்றான்.

மற்ற ஜீவராசிகளிடமில்லாத கவலைகள், தன்மைகள் பல மனித ஜீவனிடத்தில் குடி கொண்டிருக்கின்றன.

மனித ஜீவனில் தான் இல்வாழ்க்கை, குடும்ப வாழ்க்கை என்பது வேறு எந்த ஜீவனிடத்திலும் இதுபோன்ற வாழ்வு கிடையாது. இல்வாழ்விற்காக மனிதன் தன் வாழ்நாள் பூராவும் கவலை உடையவனாக இருக்க வேண்டி இருக்கிறது.

திருமண முறை என்பது மனித ஜீவனுக்குக் கேடானது. அறிவோடு சிந்தித்தால் தேவையற்றதேயாகும். மனிதன் மற்ற ஜீவன்களை விட அறிவுடைய ஜீவன். ஆனால் அதற்கேற்ப நம்மிடம் எந்த அறிகுறியும் இல்லை.

மனிதனுக்கு இல்வாழ்க்கைத் தன்மை என்பது எதற்காக? என்ன அவசியம்? மனிதனுக்குப் புத்தி இருப்பதற்கு இதுதானா பலன்? பெண்களுக்கு எதற்காக எஜமான் வேண்டும்? எஜமான் (புருஷன்) இல்லாமல் வாழப் பெண்களால் முடியாதா?

சாதாரணமாகக் கரடி, புலி, சிங்கம் இவையெல்லாம் மனிதனை விடப் பலம் பொருந்தியவை; அவற்றுக்கு இல்லாத இல்வாழ்க்கை முறை மனிதனுக்கு மட்டும் ஏன்? அதிக புத்தி இல்லாததனாலே என்று

சொல்லலாம்.

அதிக புத்தி இல்லாத அவை கவலையற்று இருக்கும் போது, அதிக புத்தியுடைய மனிதன் அறிவு, மானம் இவையெல்லாம் விட்டுக் குடும்ப வாழ்வு வாழ வேண்டிய அவசியம் என்ன என்பதைச் சிந்திக்க வேண்டுகிறேன்.

இது இன்று பலருக்கு வியப்பாக இருக்கலாம். ஆனால் இன்னும் 30- அல்லது 50- ஆண்டுகள் போனால் இந்த நிலை ஏற்படத்தான் போகிறது. இதை யாரும் தடுக்க முடியாது.

கணவனும், மனைவியுமாக வாழ்கின்ற வாழ்க்கை தான் ஆணுக்கும், பெண்ணுக்கும். வாழ்வு என்பது எதற்காக? ஆணுக்கு மனைவியும், பெண்ணுக்குப் புருஷனும் எதற்காகத் தேவை? இவை இரண்டுமில்லாததால் என்ன கெட்டுவிடும்?

சாதாரணமாக ஆட்டை எடுத்துக் கொண்டால் ஆண் ஆடு எல்லாம் மனிதனுக்கு உணவாக வேண்டியது. பெண் ஆடெல்லாம் குட்டிப் போட்டாக வேண்டியது என்பது தானே! அதுபோலத் தானே, ஆண் உழைக்கவும், பெண் குட்டிப் போடவும், சோறு சமைக்கவு மென்றிருக்கிறது.

ஒரு பெண் எதற்காக ஆணுக்கு அடிமையாக இருக்க வேண்டியது? உலக ஜனத் தொகையில் சரி பகுதியாக இருக்கும் பெண்கள் ஆண்களுக்கு அடிமையாக இருக்க வேண்டியது தான் அவர்கள் பகுத்தறிவு பெற்றிருப்பதற்குப் பயனா?

ஒருத்தனை ஒருத்தன் அடிமை கொண்டால் சட்டப்படிக் குற்றம் என்கின்றோம். ஒருவனை ஒருவன் தொட்டால் தீண்டாமை என்று சொல்லுவது சட்டப்படிக் குற்றமென் றிருக்கும் போது, ஒரு பெண்ணை நிரந்தர அடிமையாக்கக் கூடிய திருமணம் சட்டப்படிக் குற்றமாக்கப்பட வேண்டியது தானே நியாயமாகும்.

இல்வாழ்க்கை குடும்பம் என்பதெல்லாம் மனிதன் காட்டு மிராண்டியாக இருந்த காலத்தில் இருந்திருக்கலாம். இன்றைக்கு ஏன் இந்தத் தொல்லை? இதை அறிவுள்ள மனிதன் சிந்திக்க வேண்டாமா?

மனிதன் ஒவ்வொரு காரியத்திலும் மேலே போக வேண்டு மென்று விரும்புகின்றான். போய்க் கொண்டிருக்கின்றான். 3,000- வருஷம் மனிதன் இருந்தும் இதுதான் வாழ்விற்கு என்றால், சோம்பேறிகள் சொல்லுகின்ற மோட்சத்திற்குப் போகலாம். சொர்க்கத்திற்குப் போகலாம் என்று மனிதன் சிந்தனையும், அறிவும் அற்று அதனை நம்பிக் கொண்டிருப்பது போலத் தானே இல்வாழ்க்கை, குடும்பம் என்பவைகளால் மனிதன் சுய சிந்தனையும், சுதந்திரமுமற்றவனாக இருக்கின்றான்.

வள்ளுவன் மேலே எனக்குக் கோபம் வந்ததற்குக் காரணமே அவன் இல்வாழ்வு வாழ வேண்டுமென்று கூறியதில் தான்! எதற்காக அறிவுடைய மனிதனுக்கு இல்வாழ்வு? அதனால் மனிதன் அடைந்த பலன் என்ன?

இல்வாழ்வு குடும்பம் என்று இப்படியே 1,000- வருஷத்திற்கு இருந்து பலன் என்ன? உன்னால் ஆனது என்ன? உன்னுடைய அறிவிற்கு என்ன பயன்? மனித ஜீவனுடைய நிலை இதுதானா?

இதற்கு மேலே போகிற அறிவு நமக்கு இல்லாததனாலே மோட்சம் தான், நரகம் தான் என்றிருப்பதாலே கோயிலைக் கட்டிக் கொண்டு போகிறான்.

மனிதன் என்றால் ஞானம், மோட்சம் வேண்டும் என்கின்றான். அவை என்னடா என்றால், அது உனக்கல்ல, ஞானிகளுக்கு என்கின்றான். உனக்குப் புரிந்து கொள்ள முடியாது என்கின்றான்.

குறைந்த அளவு ஒழுக்கத்தோடு, நாணயத்தோடு வாழ வேண்டுமென்றில்லையே! பெண்ணாகப் பிறந்தால் கணவனுக்குத் தொண்டு செய்ய வேண்டும். குட்டி போட வேண்டும். தன் அறிவைப் பயன்படுத்தக் கூடாது. ஆணாகப் பிறந்தால் மனைவியை - பிள்ளைக் குட்டியைக் காப்பாற்ற வேண்டும். இதுதான் அவனுக்கு வாழ்க்கைச் சிந்தனையாக இருக்கிறது.

மதம், கடவுள், இலக்கியம், மோட்சம், இவை நம் அறிவைக் கெடுத்து விட்டன. மனித சமுதாயம் அறிவோடு வாழ வேண்டியது;

சுதந்திரத்தோடு வாழ வேண்டியது; புதுவாழ்வு மலர வேண்டியது என்கின்ற எண்ணம் எவனுக்குமே தோன்றுவது கிடையாது.

மனித சக்திக்கு மேல் ஒரு சக்தி இருப்பது என்பது பித்தலாட்டம். இனி இந்தக் குடும்ப வாழ்வு - இல்லற வாழ்வு என்பதைச் சட்டப்படிக் குற்றமாக்க வேண்டும்.

தமிழனில் வள்ளுவனுக்கு மேலே அறிஞன் இல்லை, புலவன் இல்லையே! 2,000- வருஷங்களாக வேறு எந்த அறிவாளியும் தோன்றவே இல்லையே! ஒரு தாயுமானவர், பட்டினத்தார், இராமலிங்கம் என்பரெல்லாம் பழைய குப்பையைப் பாடி விட்டு சென்றவர்களே தவிர, பகுத்தறிவு வாதிகள் அல்லவே.

நான் பகுத்தறிவுவாதி என்று யாரைச் சொல்கிறே னென்றால், நாம் சொல்வதைத் துலுக்கரும் ஏற்றுக் கொள்ள வேண்டும். கிறிஸ்தவரும் ஏற்றுக் கொள்ள வேண்டும். மற்றவனும் ஏற்றுக் கொள்ள வேண்டும். அப்படிப்பட்ட கருத்தைச் சொல்பவன் தான் பகுத்தறிவுவாதி யாவான். நான் திருமணம் கூடாது என்று சொல்கின்றேன். இதில் யாருக்கும் கருத்து வேறுபாடு இருக்க நியாயமில்லையே!

எனவே, நாம் புதிய உலகத்தை உண்டாக்கிக் கொள்ள வேண்டும். நாம் 3,000- ஆண்டு காலமாக ஒரே நிலையில் - காட்டுமிராண்டித் தன்மையிலிருந்து கொண்டிருக்கின்றோம்.

ஒரு துறையில் மட்டுமல்ல, அரசியலில் அப்படித்தான், சமுதாயத் துறையில் அப்படித்தான், எவ்வளவு உயர்ந்ததாக இருந்தாலும், பழைமையைத் தள்ளி விட வேண்டும். புதுமையை ஏற்றுக் கொள்ள முன்வர வேண்டும்.

நம் மனிதர்கள் மற்ற ஜீவன்களை விட உயர்ந்த அறிவு இருக்கிறது. அதைப் பயன்படுத்திச் சூழ்நிலைக்கேற்ப நம்மை மாற்றிக் கொள்ள முன்வர வேண்டும். அதுதான் அறிவு பெற்றதற்குப் பயனாகும்.

23.04.1969 - தஞ்சைத் திருமண விழா உரை. விடுதலை - 02.05.1969

## 20.நாணயக்கேடு, ஒழுக்கக்கேட ◌டிற்கு அதிகமான பிள்ளைகள் பெறுவதே காரணம்

தோழர்களே! இன்றையத் தினம் இந்தக் கூட்டமானது குடும்பக் கட்டுப்பாடு இரு வார விழா - சுகாதார நிலையத்தின் 10-வது ஆண்டு விழா என்கிற பெயரால் கூட்டப்பட்டதாகும். இந்த விஷயங்களைப் பற்றித் தலைவர் அவர்களும் மற்றவர்களும் நல்லவண்ணம் அரிய கருத்துகளை எடுத்துச் சொன்னார்கள்.

இதில் நானும் வந்து எனக்குத் தெரிந்த கருத்துகளை எழுத்துச் சொல்ல வேண்டுமென்று அழைக்கப்பட்டிருப்பதற் கிணங்க சில விஷயங்களைச் சொல்கிறேன்.

இந்த இந்திய நாட்டிலேயே குடும்பக் கட்டுப்பாடு, கர்ப்பத்தடை என்பது பற்றி முதன் முதல் பேசியவன், எழுதியவன் நானேயாவேன். இதனால் அந்தக் காலத்திலே பெரிய எதிர்ப்புகளுக்கெல்லாம் ஆளானேன். கிறிஸ்த்தவர்கள் எதிர்ப்பு மிக அதிகமாக இருந்தது. கர்ப்ப ஆட்சி என்ற கட்டுரை எழுதியது 1930-லே. அந்தக் கட்டுரையிலேயே இரண்டு வருடங்களுக்கு முன்பே எழுதியிருக்கிறேன் என்று குறிப்பிட்டு ஒரு கருத்தை வெளியிட்டிருக்கிறேன். அதற்கும் முன்பிருந்தே இந்தப் பிரசாரம் செய்து கொண்டு வருகிறேன்.

என்றாலும், மதத்தின் பெயரால் எதிர்த்தவர்கள் எதிர்த்துக் கொண்டே இருந்தார்கள். ஒரு கட்டுரையல்ல, இரண்டு கட்டுரையல்ல, பல கட்டுரைகளை எழுதியிருக்கின்றேன். அவற்றையெல்லாம் தொகுத்து 1936- இல் 'கர்ப்ப ஆட்சி' என்ற தலைப்பில் புத்தகமாகப் போட்டிருக்கின்றேன். இப்போது நான் இந்தப் பிரசாரத்தை எந்த முறையில் செய்து கொண்டு வருகிறேன் என்றால், சுயமரியாதைத் திருமணம் என்கிற பெயரால் செய்யப்படும் திருமணங்களில் எல்லாம் ஆசி கூறும் போது, அளவோடு குழந்தைகளைப் பெற்றுக் கொள்ளுங்கள் என்றும், இரண்டு குழந்தைகளுக்கு மேல் பெற்றுக் கொண்டு தொல்லைப் படாதீர்கள் என்றும், அதிகக் குழந்தைகளால் தங்களுக்கு மட்டுமல்ல, சமுதாயத்திற்கும் கேடு என்றும் விளக்குவதன் மூலம் செய்து

வருகின்றேன்.

இப்போதுள்ள நிலைமை - அரசாங்கமே முயற்சி எடுத்து அதற்காக பெரிய நிலையங்களை எல்லாம் ஏற்படுத்திப் பிள்ளை பெறுவதைக் குறைக்க வேண்டுமென்று ரொம்பப் பணம் செலவழிக்கிறார்கள் பிரசாரம் செய்கிறார்கள். அதில் ஒன்று தான் இந்த விழாவாகும்.

பொதுவாகவே உலகத்தில் மனிதன் சுகப்படப் பிறந்தவனே யொழிய தொல்லைப்படுவதற்கு - கஷ்டப்படுவதற்காக அல்ல. குழந்தைகள் அதிகம் உள்ளவன் சுக வாழ்வு என்பது முடியாது. அவன் வாழ்வு பூராவும் அவற்றுக்கே செலவிட வேண்டியவனா கிறான். ஒரு நாடு மனித சமுதாய வாழ்வுக்குக் கட்டுப்பட்டு சமமான நிலைமையில் வாழ வேண்டுமானால், மனிதன் தொல்லைகளற்றவனாக, அறிவோடு கூடியவனாக இருக்க வேண்டும்.

நம் நாடு ஏன் இவ்வளவு இழிவான நிலையில் இருக்கிறது? மக்கள் ஏன் உணவு, உடை, பொருள்களுக்குக் கஷ்டப்படு றார்கள்? என்றால் மக்கள் தொகைப் பெருக்கத்தாலும், மக்களிடையே இருக்கும் மடமை, மூடநம்பிக்கை, பகுத்தறிவற்ற தன்மையினாலு மேயாகும்.

இப்போது சாவு குறைந்து விட்டது. முன்பெல்லாம் 50- பிள்ளை பிறந்தால், 50- பேர் இறப்பார்கள். கிறிஸ்து பிறந்த அந்த வருடத்தில் உலகத்தில் இருந்த மக்களின் தொகை 20 கோடி தான் ஆகும். அந்த 20 கோடி மக்கள் 1,430 வது வருடத்தில் கணக்குப் பார்த்தால் அவர்கள் 45 கோடிப் பேர் தான் ஆனார்கள். 1,500 வருடங்களுக்கு அதிகரித்த மக்கள் 25 கோடிப் பேர்தான். காரணம் என்னவென்றால் 50 பேர் பிறந்தால், 50 பேர் சாவார்கள். பிறப்பும், இறப்பும் ஏறக்குறைய சமமாக இருந்தன.

பின்னால் மக்கள் தொகை அதிகரித்து வந்திருக்கிறது. 1650 லும் 47 கோடி மக்கள் தான் உலக ஜனத்தொகை 1800 இல் 70 கோடி மக்களாக இருந்தது ஜனத்தொகை. 150 வருடத்திற்கு 23 கோடி மக்கள் அதிகமானார்கள். அதன் பின் 1914 இல் 165 கோடி ஆயிற்று. 115 வருடத்தில் 95 கோடி மக்கள் அதிகமாகி விட்டார்கள். இது மேல் நாட்டானின் ஆட்சி வசதிகளால் ஏற்பட்டதாகும்.

1953 இல் உலக ஜனத் தொகை 326 கோடியாகி விட்டது. 40 வருடத்தில் 1 க்கு 2 மடங்காகப் பெருகிப் போய்விட்டது. இது மேல் நாட்டவர்கள் முயற்சியால் மருத்துவமனைகள், சுகாதார வசதிகள், நோய்கள் எதுவானாலும் அவற்றுக்கு மருந்து - உடனுக்குடன் சிகிச்சை என்பதெல்லாம் ஏற்பட்ட பின், குறைந்த மக்கள் தொகை சிறிது சிறிதாக வளர்ச்சியடைந்து இப்போது 370-கோடி என்று சொல்கிறார்கள்.

முன்பெல்லாக் காலத்தையும் விட இப்போது மக்கள் தொகை அதிகரிக்கக் காரணம் என்ன? மக்கள் கிறிஸ்து பிறந்த போதெல்லாம் காட்டுமிராண்டிகளாக மிருகத்தோடு ஒன்றாக இறந்தார்கள். பிறந்தால் இறப்பது 'பகவான் செயல்' என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். பின்னால் மேல் நாட்டானின் முயற்சியாலும், அவர்கள் தம் நாட்டையெல்லாம் ஆளும்படி யான வாய்ப்பு ஏற்பட்டதாலும், அவன் சுகாதார வழிகளில் செய்த பிரயத்தனத்தாலும் மக்கள் தொகை அதிகமாகிவிட்டது.

உலகத்திலேயே படித்தவனெல்லாம் - நல்ல மனிதனெல் லாம் கூட பிச்சை எடுக்க வேண்டி வந்தது இந்தப் பிள்ளைக்குட்டி யாலேயேயாகும். பிச்சை எடுப்பது எப்படியென்றால், பல்லைக் காட்டிக் கொண்டு கெஞ்சுகிறான். “அய்யா, நான் பிள்ளைக் குட்டிக்காரனுங்க. எனக்கு 6 பிள்ளை, 8 பிள்ளை என்னை மாற்றி விட்டார்கள். பிள்ளைகளெல்லாம் படித்துக் கொண்டிருக் கிறார்கள். ரொம்பக் கஷ்டப்படுகிறேன். எப்படியாவது இந்த மாற்றத்தை ரத்து செய்ய வேண்டும்” என்று கெஞ்சுகிறார்கள்.

இலஞ்சம் வாங்கி, வேலையிழந்து விட்டவனும், பிள்ளைக் குட்டியைக் காட்டி “எனக்கு இத்தனை பிள்ளைகளிருக்கின்றன வேலை போய் விட்டது; எப்படியாவது வேலை வாங்கிக் கொடுங்கள்” என்று காலைப் பிடிக்கிறான். ஏண்டா, இலஞ்சம் வாங்கினாய் என்றால், “இத்தனை பிள்ளைக்குட்டிகளுக்குக் கொடுக்கிற சம்பளம் காணவில்லை” என்கிறான். இப்படி நாணயக்கேடு, ஒழுக்கக் கேட்டிற்கு அதிகமான பிள்ளைகள் பெறுவதே காரணமாகும்.

1, 2 குழந்தைகளோடு தொலைந்து போகட்டும்; அதற்கு மேல் பெற்றால் அரசாங்கம் வரி போட வேண்டும். அப்படி ஒரு ஏற்பாடு செய்தால் தான் முடியும். இல்லாவிட்டால் இன்னமும் நாணயம்,

ஒழுக்கம், நேர்மையெல்லாம் விடுபட்டு விடும். "ஏண்டா இத்தனை பிள்ளை? என்றால், "பகவான் கொடுக்கிறான், நான் என்ன செய்வது?" என்கிறான். பகவான் உனக்குப் பிள்ளை கொடுத்தான் என்றால், கூடவே ஒரு மாட்டையும் கொடுப்பானே! பிள்ளைக்குப் பால் கொடுக்காதப் பகவான் என்ன முட்டாளா? பிள்ளையை மட்டும் கொடுத்து விட்டு மாடு கொடுக்காமலிருக்க? நீயும் உன் பெண்ணும் பிறக்கும் போது சேலையும், வேட்டியும் கட்டிக் கொண்டா பிறக்க முடிந்தது. இயற்கை என்று சொன்னால், பிறந்தது போலவேயல்லவா இருக்க வேண்டும். எதில் நீ இயற்கையோடு இருக்கிறாய்? சோறு தின்பதிலாகட்டும், துணிமணிகளை அணிவதிலாகட்டும், மற்றும் வாழ்விற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொள்வதிலாகட்டும், எதில் நீ இயற்கையோடு இருக்கிறாய்?

உனக்குத் தேவையானவற்றுக்கு மட்டும் இயற்கையையும், பகவானையும் சொல்வதில்லையே! உன் பாட்டுக்குத் தானே உனது காரியங்களையெல்லாம் செய்கிறாய் இயற்கை பகவான் என்று எந்தக் காரியத்தைச் செய்யாமல் இருக்கிறாய்? அல்லது உனது வாழ்க்கையில் எதில் நீ இயற்கையோடு வாழ்கிறாய்?

மனிதனுக்கும், மிருகத்திற்கும் உள்ள பேதமே மனிதனுக்குச் சிந்தனையும், ஆறாவது அறிவும் இருப்பதேயாகும். மனிதன் பிறந்து வாழ்வது பிள்ளைகள் பெற்றுக் கொள்வதற்காக மட்டுமே அல்லவே! அதிகமான குழந்தைகளைப் பெற்றுக் கொள்வதால் மனிதனின் ஒழுக்கம், நாணயம் எவ்வளவு கெடுகிறது என்று பார்க்க வேண்டும். 10, 12 பிள்ளைகள் என்றால் அவன் எப்படி ஒழுக்கத்தோடு நாணயத்தோடு வாழ முடியும்? உனக்குக் கொடுக்கிற சம்பளம் ரூ.300 என்றால் கூடப் போதாதே!

குழந்தைகள் படிக்க வேண்டும் - பாட்டு, நடனம் கற்றுக் கொள்ள வேண்டும் - நவநாகரிக உடைகள் உடுத்த வேண்டும். இப்படியெல்லாம் இருக்கும் போது மனிதன் தவறு செய்யாமல் எப்படி இந்தக் குழந்தைகளைக் காப்பாற்றுவான்? அவன் நாணயம், நேர்மை உடையவனாக இருந்தாலும், பிள்ளைக் குட்டிகளை முன்னிட்டு அவன் அதிலிருந்து தவற வேண்டியவனாகிறான்.

இந்தப் பிள்ளை பெறுகிற வேலை ஆண்களுக்கிருந்தால்

தடுத்திருப்பான். பெண்களுக்கு இருப்பதால், அதுவும் அவர்கள் வீட்டிலேயே இருப்பதால் சோறு சமைப்பது, வீட்டு வேலை செய்வது, கணவனுக்குத் தேவையான காரியங்களைக் கவனிப்பது என்பதோடு இருப்பதால் - ஆண்களுக்குத் தங்களை அடிமைப் படுத்திக் கொண்டிருக்கிற நிலையிலேயே இருப்பதால் பெண்களும் பிள்ளை பெறுகிற வேலையைப் பெரிய பளுவாகக் கருதவில்லை என்பதோடு, அது தங்களின் கடமையென்றே கருதும்படியாகவும், நம் புராண - இதிகாசங்கள் அவர்களை ஆக்கிவிட்டது.

இந்தப் பிள்ளைக்குட்டிகள் அதிகமானதால் விலை ஏற்றமடைகிறது; போதாமை அதிகமாகிறது. பணக்காரனுடன் ஏழை போட்டி போட முடியவில்லை; பணக்காரனுக்கு நல்ல பண்டமாகக் கிடைக்கிறது. விலை அதிகம் கொடுத்து வாங்கி விடுகின்றான். ஏழைகளுக்கோ மிக மோசமான பொருள்களே கிடைக்கின்றன. அதற்கும் அவன் விலை அதிகம் கொடுத்து வாங்க வேண்டியிருக்கிறது; இதையெல்லாம் எவனும் நினைப்பதில்லை. விலை அதிகமானதால் உடனே அரசாங்கத்தைக் குறை கூறுகிறானே தவிர, தன்னிடமிருக்கிற குறையை எண்ணுவது இல்லை.

நான் 1928 இல் குடும்பக் கட்டுப்பாடுப் பிரசாரத்தை ஆரம்பிக்கும்போது அரசாங்கமே எதிர்த்தது. பிறகு கொஞ்சம் கொஞ்சமாக நாடெல்லாம் பரவிற்று. இப்போது இந்தியாவில் நம் நாடு தான் முன்னணியிலிருக்கிறது. பிள்ளைப் பெறுவதைக் குறைத்துக் கொள்ள அறுவை சிகிச்சை செய்து கொண்டவர்கள் இந்தியாவில் மொத்தம் 30 இலட்சத்து 40 ஆயிரம் பேர். இதில் தமிழ்நாட்டில் மட்டும் 5 இலட்சத்து 40 ஆயிரம் பேர் கருத்தடை செய்து கொண்டிருக்கிறார்கள்.

தமிழ்நாட்டில் இருப்பவர்கள் 3.25 கோடி மக்கள். இந்தியாவில் எடுத்துக் கொண்டால் ஜனத்தொகைப்படி நாம் 14 இல் ஒரு பங்காக இருக்கின்றோம். நம் நாடு 14 இல் ஒரு பங்கு மக்களாக இருக்கிற நாம் கிட்டத்தட்ட 5 இல் ஒரு பங்கு கருத்தடை செய்து கொண்டிருக்கிறோம். நியாயமாக 14 இல் ஒரு பங்காக இருக்க வேண்டும். நாம் தான் அதிகமாகக் கருத்தடை செய்து கொண்டிருக்கிறோம். 7 கோடி மக்களுள்ள உத்தரப்பிதேசத் திலேயே 2 இலட்சம் பேர் தான் கருத்தடை செய்து கொண்டிருக்கின்றனர். மற்ற மாநிலங்கள் எதை எடுத்துக் கொண்டாலும் நம்மை விடக் குறைந்த அளவிலேயே கருத்தடை செய்து

கொண்டிருக்கின்றனர்.

இந்தியாவிலேயே நம் நாட்டில்தான் முதன் முதல் இந்தப் பிரசாரத்தை நான் ஆரம்பித்துச் செய்து கொண்டு வருகின்றேன். நம் நாட்டில் செய்து வந்த பிரசாரமும், முயற்சியும் வீணாகப் போகவில்லை. நாம் என்ன முடிவு செய்ய வேண்டும்? 1, 2 குழந்தைகளோடு நிறுத்திக் கொள்ள வேண்டும். எந்தக் காரணத்தைக் கொண்டும் அதற்கு மேல் பிள்ளை பெறக் கூடாது. இதனால் மனிதனின் ஒழுக்கம், செல்வம் இவை வளர்வதோடு, சுதந்திரமாகக் கவலையற்று வாழ முடியும் என்பதோடு, நாட்டிலேயும் அதிக நெருக்கடி ஏற்பட்டு ஒருவனை ஒருவன் தின்கிற நிலையும் இல்லாமல் போகும்.

நம் நாட்டில் குழந்தை பெறுவதை மதத்தோடு பிணைத்து விட்டான். குழந்தை இல்லாவிட்டால் நரகத்திற்குப் போவாய் என்கிறான். குழந்தை தனக்குப் பிறக்கவில்லை என்றால் வேறு யாரிடமாவது, தன் மனைவியை விட்டுக் குழந்தை பெற்றுக் கொள்ளலாம் என்கிறான்.

இது 'ஞான பூமி, அவன் பிறந்த பூமி, இவன் பிறந்த பூமி' என்பான். ஆனால் உலகத்தை எடுத்துக் கொண்டால், நாம் இன்றும் காட்டுமிராண்டிகள் தான். நம் முன்னோர்கள் என்ன சொன்னார்கள்? பாட்டன் எப்படி இருந்தான் என்று பின்னால் போவானே ஒழிய, நமக்கு முன்னுள்ள நாட்டு மனிதன் எப்படி வாழ்கிறான் என்று முன்னோக்கிச் செல்ல மாட்டான். தனது அறிவை முன்னோக்கிச் சிந்திக்க விட மாட்டான். 2.000-வருடங்களுக்கு முன் எப்படியிருந்ததோ, 2 கோடி வருடங்களுக்கு முன் நம் ரிஷிகளும், வெங்காயங்களும் என்ன சொன்னார்கள் என்பதைப் பார்ப்பானே ஒழிய, நாளைக்கு நடக்கக் கூடியவற்றைப் பற்றி, எதிர்காலத்தைப் பற்றிச் சிந்திப்பது கிடையாது.

நம் மக்கள் நாளையைப் பற்றிச் சிந்திக்காததும், பகுத்தறிவைப் பற்றி கவலைப்படாததும், எல்லாம் கடவுள் செயல் என்று நம்பிக் கொண்டிருந்ததும் தான் நாம் வளர்ச்சியடை யாமைக்குக் காரணமாகும்.

ஆனாலும், வெள்ளைக்காரன் வந்ததாலே, அவன் முயற்சி எடுத்து பல அற்புத அதிசயங்களைக் கண்டுபிடித்ததாலே, கடவுள் எங்கேயோ போய் விட்டான். இப்போது மனிதன் சாவதில்லை. இரண்டு

நாட்களுக்கு முன் பத்திரிகையில் பார்த்தேன். இதயத்தையே மாற்றி வைத்திருக்கிறார்கள். இன்னொருவனுடைய இதயத்தை எடுத்து வயதான ஒருவனுக்கு வைத்து அவன் மேலும் வாழும்படியாகச் செய்திருக்கிறார்கள். இப்படிப் பல அதிசய, அற்புதங்களைச் செய்து கொண்டு வருகிறார்கள்.

நம் நாட்டில் மிகப் படித்த மேதாவிகள் விஞ்ஞானத்திலேயே பட்டம் பெற்றவர்கள், டாக்டர்கள், ஆசிரியர்கள் இருக்கிறார்கள். அவர்கள் பூகோளம், வான சாஸ்திரம் எல்லாம் நன்றாகக் கற்றவர்கள். அவை பற்றியெல்லாம் ஆராய்ச்சி செய்தவர்கள். அவர்களே கிரகணம் வருகிறது என்றால், வீட்டில் உட்கார்ந்து கொண்டு துக்கம் கொண்டாடுகிறார்கள். சூரியனையும் - சந்திரனையும் பாம்பு விழுங்கி விட்டது என்று அதை மீட்க ஜபம் செய்கின்றனர். இப்படி நம் நாட்டின் வாழ்வு - அறிவிற்கும், வாழ்விற்கும் சம்மந்தமில்லாமல் போய்விட்டது.

- 30.12.1968 - வாலிகண்டபுரம், குடும்பக் கட்டுப்பாடு வார விழா உரை.
விடுதலை - 12.01.1969

## 21.பெண், ஆணின் சொத்தா?

தமிழனுக்குள் இல்லாத இந்த முறையினைப் பார்ப்பான் எதற்காகப் புகுத்தினான் என்றால், மனிதனை அடிமையாக்கவும், முட்டாளாக்குவதற்கும், ஜாதி இழிவை நிலை நிறுத்தவும் ஏற்பாடு செய்யப்பட்டது தான் கல்யாணமாகும். இதைத் தான் வள்ளுவனும் சொன்னான். மற்றவனும் சொன்னான். எதற்காக அப்படிச் சொன்னானென்றால், பெண்ணடிமையை வலியுறுத்து வதற்காகவேயாகும். சீர்திருத்தத் திருமணம் செய்ய வேண்டுமென் கின்ற ஆசையால், ரூ.200 கொடுத்து என்னைக் கூப்பிடுகின்றான். அவனும் நேரம் பார்த்து, நாள் பார்த்துத் தான் செய்கிறான். அப்படி நம் இரத்தத்தோடு ஊறிவிட்டது. அதைப் போக்குவது கஷ்டம் தான்; என்றாலும் போக்கித்தான் ஆக வேண்டியிருக் கிறது. அதைப் போக்காமல் நம் இழிவை, சூத்திரத்தன்மையை, மானமற்றத் தன்மையைப் போக்க முடியாது. என்ன கஷ்ட, நஷ்டம் வந்தாலும் அதையெல்லாம் பற்றிச் சிறிதும் சிந்திக்காமல் இதை மாற்றியாக வேண்டும்.

எவன் ஒருவன் பெண் விடுதலையை விரும்புகிறானோ, மூட நம்பிக்கையை ஒழிக்க வேண்டுமென்று நினைக்கின்றானோ அவன் இந்த முறையில் தான் வாழ்க்கை ஒப்பந்தத்தைச் செய்து கொள்ள வேண்டும். மற்ற முறைகள் அனைத்தும் பெண்ணடிமை - மூட நம்பிக்கை - ஜாதி இழிவு ஆகியவற்றை நிலைநிறுத்தக் கூடியவையேயாகும். நமக்கிருக்கிற புராணங்கள், கடவுள் கதைகள், இலக்கியங்கள் யாவும் பெண்ணடிமையை வலியுறுத்தக் கூடியவையேயாகும். பெண்களுக்கு நீதி சொன்னவர்கள் அத்தனைப் பேருமே, பெண்களென்றால் அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்கின்ற தன்மையோடு கற்புடையவர்களாக இருக்க வேண்டுமென்று தான் சொல்லியிருக்கிறார்களே ஒழிய, ஒருவர் பெண் சுதந்திரத்தோடு இருக்க வேண்டும் என்று சொல்லவில்லை.

வள்ளுவரே பெண்ணடிமையை வலியுறுத்துகிறார். வள்ளுவனை விளம்பரப்படுத்தியவன் நான். திருக்குறளைப் பரப்பியவன் நான். புலவர்களை விட அவர் கொஞ்சம் பரவாயில்லை என்பது தானேயொழிய, அவர் கருத்துகள் அத்தனையுமே ஏற்றுக் கொள்ளத்தக்கது என்பதல்ல.

'தற்கொண்டான்பேணி' என்கின்றார். தற்கொண்டான் என்றால் தன்னைக் கொண்டவன். அதாவது தன்னை விலைக்கு வாங்கியவன் என்று தானே பொருள். அப்படியானால் பெண்கள் விலைக்கு வாங்குகிற பொருள் என்று தானே அர்த்தம். அதுபோன்று ஆணைச் சொல்லவில்லையே. எழுதியவன் இரண்டு பேரையும் ஒன்றாக வைத்து எழுதி இருந்தான் என்றால் சரி. பெண் பதிவிரதையாக இருக்க வேண்டுமென்று சொன்னவன் ஆண் சதிவிரதத்தோடு இருக்க வேண்டுமென்று சொல்ல வில்லையே. நான் வள்ளுவனைக் குற்றம் சொல்லவில்லை. அவன் வாழ்ந்த காலம் பெண்ணடிமை மிகக் கொடுமையாக இருந்த காலம். அதற்கேற்றபடி எழுதி இருக்கிறார். அது இன்றைக்கு எப்படிப் பொருந்தக் கூடியதாக இருக்க முடியும்?

பொதுவாகத் திருமணமென்றால் ஆண் - பெண்ணையோ பார்த்து ஏற்பாடு செய்வது கிடையாது. நீ பெண்ணுக்கு திருமணமென்றால் ஜாதகம் - ஜோசியம் - பொருத்தம் - நாள் - நட்சத்திரம் இவற்றைப் பார்க்கிறாய். நீ அன்னக்காவடி சீதையின் திருமணம் வசிஷ்டனை வைத்து ஜோசியம் பொருத்தம் பார்த்துச் செய்யப்பட்டது தானே. வசிஷ்டனை விட ஜோசியம் பொருத்தம் பார்க்கக் கூடியவர்கள் இல்லை.

அப்படிப்பட்டவனை வைத்துப் பொருத்தம் பார்த்துச் செய்த திருமணத்தில் தான் சீதை இன்னொருவனுக்குச் சினையாகி கணவனால் அடித்து விரட்டப்பட்டிருக்கின்றாள். உண்மையாக நடக்கவில்லை என்றாலும், அவள் துன்பப்பட்டதாக எழுதி இருக்கின்றான். உண்மையாக நடந்தது என்று சொல்லவில்லை. இதற்காக எழுதிய கதையே இப்படி இருக்கிறது. ஜோசியம் பொருத்தம் இவை சக்தியுள்ளவையாக இருந்தால் இவ்வளவு (முண்டச்சி) விதவைகள் ஏன் இருக்கிறார்கள்? இதையெல்லாம் நம் மக்கள் சிந்திக்க வேண்டும். நம் இலக்கியங்கள், புலவர்கள் எல்லோருமே பொம்பளையைக் கெட்டுப் போனவள் என்பதற்கு 1000-சொற்கள் சொல்கிறான். ஆணைக் கெட்டுப் போனவன் என்று சொல்ல ஒரு சொல் கிடையாது.

மணமக்கள் தங்கள் வாழ்க்கையில் வரவுக்கு உட்பட்டுச் செலவு செய்ய வேண்டும்; ஆடம்பரமான வாழ்வு வாழ வேண்டுமென்று ஆசைப்படக் கூடாது. சாதாரண எளிய வாழ்வு வாழ வேண்டும்.

பிள்ளைகள் பெறுவதில் மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். மனிதன் ஒழுக்கம் கெடுவதற்குக் காரணம் இந்தப் பிள்ளைக் குட்டிகளைப் பெற்றுக் கொள்வதால்தான். அவர் களுக்குத் தேவையானவற்றைக் கவனிக்கவே அவன் வாழ்நாள் பூராவும் சரியாகி விடும். அவர்களைப் படிக்க வைக்க வேலை வாங்கிக் கொடுக்க, இதற்கே அவனுக்குச் சரியாகி விடும். கர்ப்பத்தைக் தடுக்காதே என்று சொல்கிறானே அவனெல்லாம் தீரன். லஞ்சம் வாங்குவதிலே! இயற்கையாக மனிதன் ஒழுக்க மாக இருக்க வேண்டுமானால் பிள்ளைக் குட்டிப் பெறுவதைக் கூடிய வரை குறைத்துக் கொள்ள வேண்டும். மூட நம்பிக்கையான காரியங்களில் ஈடுபடக் கூடாது. கண்டிப்பாய்க் கோயில்களுக்குப் போகக் கூடாது. பகுத்தறிவோடு நடந்து கொள்ள வேண்டும்.

பெண்கள் வளர்ச்சி அடையாமல் போனதற்குக் காரணம், நாம் அவர்களை எதையும் செய்ய ஒட்டாமல் தட்டித் தட்டி அடக்கி வைத்திருப்பதேயாகும். 3.50 கோடி மக்கள் தமிழ்நாட்டில் வாழ்கிறார்கள் என்றால், 1.45 கோடி பெண்கள் அடிமைகள் தானே! அவர்களால் சமுதாயத்திற்கு எந்தப் பலனும் கிடைக்க முடியாமல் போய் விட்டது. ஜப்பானில் 100-க்கு 50-பேருக்குக் கணவன் இல்லை. அவர்கள் எல்லாம் ஒன்றும் கெட்டுப் போய் விடவில்லையே! மலையாளத்திலே இன்றைக்கு அனேகம் பேருக்குக் கணவன் கிடையாது - அவர்களெல்லாம் கெட்டுப் போய்விட்டார்கள் என்று சொல்ல முடியாது.

- 18.08.1968 - கலியமூர்த்தி - இராசகுமாரி திருமண விழா உரை.
விடுதலை - 21.09.1968

# 22. இந்து மதத்தை எதிர்க்காத பெண்விடுதலைப் பேச்சுக்கள் அடிமைத்தனமே!

இந்து மத தருமத்தில் பெண்கள் ஈனப் பிறவி, கடவுளாலேயே விபச்சாரிகளாகப் பிறப்புவிக்கப்பட்டார்கள். சுதந்திரத்திற்கு அருகதையற்றவர்கள். ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய தாய் விபச்சாரம் செய்திருப்பாள் என்கிற நம்பிக்கையோடுப் பிராயச்சித்தம் செய்துகொள்ளக் கூடியவன். பெண்கள் கலியாணம் செய்து கொள்ளும் வரையில் தகப்பனுடைய பந்தோபஸ்தில் இருக்க வேண்டும்.

கலியாணம் செய்து கொண்ட பிறகு புருஷனுடைய பந்தோபஸ்திலிருக்க வேண்டும். இல்லாவிட்டால் ஒழுக்க வீனர்களாய்ப் போய்விடுவார்கள். பெண்களுக்குச் சொத்து இருக்கக் கூடாது. அவர்களிடத்தில் புருஷர்கள் உண்மை பேசக் கூடாது, ரகசியம் சொல்லக் கூடாது. இன்னும் இவை போன்ற எத்தனையோ நிபந்தனைகள் தரும சாஸ்திரத்திலும் கலியுகத்திற்கு, ஆதாரமான பராசரஸ்மிருதியிலும் மற்றும் அவைகளை ஆதரிக்கும் இதிகாசப் புராணங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

இவைகளை (இந்த புஸ்தகங்களையும் சாஸ்திரங்களையும்) ஒப்புக் கொள்ளுகிறவனும் உண்மையான சநாதன ஹிந்து என்று சொல்லிக் கொள்ளுகிற எவனுக்கும் பெண்கள் சுதந்திரத்தைப் பற்றி பேச உரிமை இல்லை என்பதே தான் எனது அபிப்பிராயம்.

இந்த விஷயத்தில் திராவிட தர்மமோ, சமண தருமமோ எல்லாம் ஒரேவித யோக்கியதைக் கொண்டதே என்பது எனது அபிப்பிராயம். தெய்வத் தன்மை பொருந்தியவரென்று சொல்லும் திருவள்ளுவர் என்பவர் கூட தம் பெண் சாதியை விபச்சாரியா பதிவிரதையா என்று பரீட்சித்துப் பார்க்க ஆசைப்பட்டு மணலை சோறாகச் சமைக்கச் சொல்லி அந்த அம்மாளும் அது போலவே சமைத்துப் போட்ட பிறகே தான் கலியாணம் செய்து கொண்டதாகச் சொல்லப்படுகிறது.

இந்தப் படி பரீட்சை செய்து பார்த்தால் இன்றையதினம்

உலகத்திலுள்ள பெண்கள் எல்லாம், இங்கு இருக்கிற பெண்கள் எல்லாம் விபசாரிகளென்று தான் நாம் தீர்மானிக்க வேண்டும். ஏனெனில் ஒரு சகோதரியாலும் மணலை அரிசிச் சாதமாக சமைக்கவோ மழை பெய்யச் சொல்லவோ, பச்சை வாழைத் தண்டுவைக் கொண்டு சமையல் செய்யவோ முடியாதென்று சொல்ல வேண்டியிருக்கிறது.

வேறு எந்தக் காரியத்துக்காகவும் இந்து மதத்தை ஒழிக்காமல் தாட்சண்யம் பார்ப்பதாயிருந்தாலும் பெண் களுடைய சுதந்திரத்தை உத்தேசித்தாவது இந்து மதமென்பது அழிய வேண்டியது மிக்க அவசியமாகும்.

இந்து மத புராண இதிகாசங்களில் புருஷன் தாசி வீட்டுக்கு கூட்டிக் கொண்டு போனதாகவும், புருஷன் குஷ்டரோகியாகி விட்டதால் அவனைக் கூடையில் சுமந்து கொண்டு போனதாக நளாயினி முதலிய கதைகள் சொல்லப்படுகிறது. எவ்வளவு அக்கரமும் கொடுமையுமானக் கொள்கை இது என்பதை யோசித்துப் பாருங்கள். என்னுடைய மகள் நளாயினியைப் போல் இருப்பாளானால் கட்டாயம் அவளை நான் விஷம் வைத்துக் கொன்று விடுவேனேயொழிய குஷ்ட ரோகியைச் சுமந்து கொண்டு தாசி வீட்டிற்குக் கொண்டுபோய் விடும்படிப் பார்த்துக் கொண்டிருக்க மாட்டேன்.

பெண்கள் விபச்சாரிகள் என்பதை ஆதரிக்க எழுதி வைத்த ஆதாரங்களில் ஒன்று தான் பாரதம் என்பது எனது அபிப்பிராயம். ஏனெனில் பாரதத்தின் முக்கிய பாத்திரங்களில் ஒன்றான திரவுபதை என்பவள் தனக்கு அய்ந்து புருஷன் மார்கள் உண்டு என்றும் அவ்வளவும் போதாமல் ஆறாவது புருஷன் ஒருவன் மீது தனக்கு ஆசையிருந்தது என்றும், ஆதலால்தான் விபச்சாரி என்றும் உலகத்தில் பெண் தன் புருஷனைத் தவிர வேறு ஆண்களே இல்லாமலிருந்தால்தான் பெண்கள் பதிவிரதையாய் இருக்க முடியுமென்றும் ஓர் உயர்குலப் பெண்ணேத் தன் வாயினால் சொன்னதாக எழுதி வைக்கப்பட்டிருக்கிறது.

அரிச்சந்திர புராணத்தில் தன் பெண் ஜாதியை பல சொத்துக்களில் ஒன்றாகக் கருதி வேறு எவனுக்கோ விலைக்கு விற்றதாகவும், அவளும் தன்னை ஒரு உண்மையான அடிமை என்பதை ஒப்புக் கொண்டு வாங்கப் பட்டவனிடம் தொண்டு செய்ததாகச் சொல்லப்பட்டு இருக்கிறது. வேறு புண்ணிய புராணங்களில் அடியார்கட்கு பெண்சாதிமார்களைக் கூட்டிக் கொடுத்ததாகவும் அந்தப்

பெண்களும் அப்புருஷர்கள் வாக்கைத் தட்டக்கூடாது என்று கருதி அடியார்களிடம் போய் படுத்துக் கொண்டதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. மற்றும் சில நீதிக் கதைகளில் தங்கள் புருஷன்மார்களுடைய வைப்பாட்டிகளுக்குத் தொண்டு செய்ததாகவும் சொல்லப் பட்டிருக்கிறது.

இராமாயணம் என்கிற இதிகாசத்தில் ஒருவன், ஒரு நீதியான சக்கரவர்த்தி அறுபதினாயிரம் பெண்சாதிகளை மணந்து கொண்டதாகவும் பட்டத்துக்கு தன் சொந்த அரண்மனையில் வேறு மூன்று பெண்டாட்டிகளை மணந்து கொண்டிருந்த தாகவும், யாகத்தில் அவர்களைப் பார்ப்பனர்களுக்குத் தன்னுடைய சொத்துவைப் போல கருதித் தருமமாக கொடுத்து விட்டதாகவும் அவர்களாலே பெண்களை வைத்து நிர்வகிக்க முடியாமல் திரும்பவும், பணம் வாங்கிக் கொண்டு ராஜாவுக்கே கொடுத்து விட்டதாகவும், இம்மாதிரி பண்ட மாற்றுதலுக்கு பெண்களை உபயோகப் படுத்தினதாகச் சொல்லப்படுகிறது.

இன்னும் நம்முடைய பழைய அரசர்கள் ஒருவராவது ஒரு பெண்சாதியுடன் இருந்ததாகவோ, பெண்சாதிகளைச் சமமாகவோ காண்பதற்கில்லை. அப்படி எங்காவது காணப் படுவதாயிருந் தாலும் அது ஒருக்காலும் மேற்படி மததர்மங்கட்கு முரணானது என்று தான் சொல்ல வேண்டும். இது வரையிலும் மக்கள் பெண்கள் சுதந்திரம் என்று பேசிக் கொண்டு வந்ததெல்லாம் வெறும் புரட்டும் முன்னுக்குப்பின் முரணுமாய் முடிந் திருக்கிறதே தவிர காரியத்தில் உண்மையாகப் பெண்கள் விடுதலைக்கு மார்க்கங்கூட கண்டுப்பிடிக்கப்படவில்லை என்பது தான் எனது அபிப்பிராயம்.

பெண்கள் விடுதலைக்கு வெளியில் வருபவர்கள் பெண் சம்மந்தமான இந்துமத தர்மத்தையும், சாஸ்திரத்தையும், புராணத்தையும், இதிகாசத்தையும் நீதிக் கதையையும் ஒதுக்கி வைத்து விட்டுத்தான் வர வேண்டும். அப்படிக்கில்லாமல் மேற்கண்ட அழுக்கு மூட்டைகளைச் சுமந்து கொண்டு யார் எங்கு போய் பெண்கள் சுதந்திரம் பேசினாலும் அது கட்டுப்பாடு உள்ள அடிமை பிரகாரமாகத்தான் முடியுமே தவிர அது சிறிதும் விடுதலையை உண்டாக்காது.

மற்றும் பெண்களைப் படிக்க வைக்க வேண்டும் என்று

சொல்லி எழுத்து வாசனையுண்டாக்கி அவர்கட்கு அரிச்சந்திர புராணத்தையும், நளாயினி கதையையும், இராமாயணத்தையும், பாரதத்தையும் படிக்க வைத்தால் பின்னும் அதிகமாக அடிமைகள் ஆவார்களா? சுதந்திரமடைவார்களா? என்பதை நீங்களே யோசித்துப்பாருங்கள்.

- 31.05.1930 - கள்ளிக்கோட்டை S.N.D.P. யோகம், தீயர் மகாநாட்டு உரை. குடி அரசு - 8.6.1930

# 23.இலக்கியங்கள் பெண்களை அட ிமைப்படுத்துகின்றன!

மணமக்களின் பெற்றோர்கள் இந்நிகழ்ச்சியினை இம்முறையில் அமைத்ததோடு, என்னையும் அழைத்து நடத்திக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டதற்கு எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த நிகழ்ச்சியானது இதுவரையில் நம்மிடையில் நிகழ்ந்து வந்த நிகழ்ச்சிகளுக்கு முற்றிலும் மாறான தன்மையில் அமைக்கப்பட்டிருக்கிறது. பழைய நிகழ்ச்சியினை மாற்ற வேண்டிய அவசியம் ஏன் ஏற்பட்ட தென்றால் பழைய நிகழ்ச்சியானது மனிதத்தன்மைக்கு ஏற்றதாக இல்லாமல் பெண்களை அடிமைப் படுத்தவும் - மனிதனைக் காட்டு மிராண்டியாக்கவும், ஜாதி இழிவு அடிமையை நிலைநிறுத்தவும், பொருத்தமும், சம்பந்தமும் அற்ற சடங்குகளோடு விவாகம் - தாராமுகூர்த்தம் - கன்னிகாதானம் என்னும் பெயரால் நடைபெற்று வந்தது.

அரசாங்கத்திலும் மதத்திலும் - சமுதாயத்திலும் ஆதிக்கம் பெற்றிருக்கிற பார்ப்பனர் தங்கள் ஆதிக்கம் நிலைத்திருக்க வேண்டும் என்பதற்காகப் பெரும்பான்மையான மக்களை மடமையில் ஆழ்த்தி அவர்களை அறிவு பெற ஒட்டாமல் தடுத்து அவர்களைப் பகுத்தறிவற்ற மடையர்களாகச் செய்து தங்களின் ஆதிக்கத்தை நிலைநிறுத்திக் கொண்டார்கள். மக்களிடம் அறியாமையை நிலை நிறுத்த வேண்டுமானால் அவர்களை மூடநம்பிக்கைக்காரர்களாக்கினால் தான் முடியும் என்பதை உணர்ந்த பார்ப்பனர்கள், மக்களிடையே மூடநம்பிக்கையினைப் புகுத்தினார்கள்.

கடவுள், மத, சாஸ்திரங்களின் மூலம் புகுத்தி விட்டார் களாததால் பயந்து கொண்டு மக்கள் அதனைப் பின்பற்றி வரலாயினர். இது மாற வேண்டுமென்று இந்தியாவிலேயே எவரும் கருதவுமில்லை - முயற்சிக்கவுமில்லை.

சுயமரியாதை இயக்கம் தோன்றிய பின்தான், அதுவும் சமூகத்தில் சரிசமமான பெண்கள் ஆண்களுக்கு எதற்காக அடிமைப்பட்டுக் கிடக்க வேண்டுமென்று கேட்க ஆரம்பித்த பின் தான்

கொஞ்சம் கொஞ்சமாக மாற ஆரம்பித்தது.

42 வருஷங்களாகச் சுயமரியாதை இயக்கம் மனிதனின் அறிவிற்கேற்ற சுதந்திரத்திற்கேற்ற எல்லா வாய்ப்புகளும் பெண்களுக்கும் இருக்க வேண்டுமென்று பாடுபட்டதன் காரணமாக, பெண்களுக்கு ஆண்களைப் போல் சமுதாயத்தில் எல்லா உரிமைகளும் இன்று வழங்கப்பட்டிருக்கின்றன. பெண்கள் அடிமைகளல்ல, ஆண்களைப் போன்று சம உரிமை யுடையவர்கள் என்பதை நிலை நிறுத்தவே இம்முறையாகும்.

ஆதிக்கம் பார்ப்பான் கையில் இருந்தாலும் அவன் கையிலிருந்து மாறினாலும் பார்ப்பன அடிமைகளான காங்கிரஸ் காரன் கைக்கு ஆதிக்கம் போனாலும் 10.000 கணக்கான திருமணம் நடைபெற்றாலும் இதுவரை இத்திருமணம் சட்டப்படிச் செல்லுபடியாகாமலலே இருந்தது. இப்போது பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு ஆட்சிக்கு வந்துள்ளவர்கள் சுயமரியாதைக் காரர்களும் திராவிடர் கழகக்காரர்களாகவுமிருந்த தமிழர் களுடைய ஆட்சியானது ஏற்பட்டதால் இத்திருமணமானது சட்டப்படிச் செல்லும் என்று சட்டமியற்றியுள்ளதோடு, இதுவரை இம் முறையில் நடைபெற்ற திருமணங்களும் செல்லு படியாகுமென்று சட்டமியற்றி உள்ளது. சுயமரியாதைக்காரர் களாகிய நமக்கு மகிழ்ச்சியளிக்கக் கூடியதென்பதோடு இதை செய்த இந்த அரசை ஆதரிப்பது உண்மையான சுயமரியாதைக் காரர்களின் கடமையுமாகும்.

பொதுவாகப் பெண்கள் தங்களுக்குத் திருமணமானால் தாங்கள் ஒரு ஜீவன் என்பதையே மறந்துவிட வேண்டும். சுற்றத்தாரை மறந்துவிட வேண்டும். எது செய்வதானாலும் தன் கணவனைக் கேட்டுச் செய்ய வேண்டும். கணவனின் மனம் கோணாமல் அவன் சொல்படி கேட்டு அவனுக்கு அடிமையாக இருந்து ஏவல் செய்ய வேண்டும். அவன் அடித்தாலும், உதைத்தாலும் பட்டுக் கொண்டு அவனுக்கு அடங்கி நடக்க வேண்டும். எதற்காக ஒரு பெண் தன் சுதந்திரத்தை இழந்து அடிமையாக இருக்க வேண்டும் என்பது பற்றி எவனுமே இதுவரை சிந்திக்கவில்லை என்பதோடு பெண்கள் இப்படி நடந்து கொள்வது தான் அவர்களின் பதிவிரதா தன்மையாகு மென்று எழுதி வைத்து விட்டான். பெண்கள் அறிவற்றவர் களானதால் அவர்களும் இப்படி நடந்து கொள்வது தங்களின் கடமை என்றே கருதி

நடந்து வந்தனர்.

முதலாவது இங்குள்ள தோழர்கள் நான் சொல்பவற்றை யெல்லாம் நம்ப வேண்டுமென்று சொல்லவில்லை. எத்தனையோ கருத்துகளில் இதுவும் ஒரு கருத்து என்று கருதிச் சிந்தியுங்கள். இதில் ஏற்றுக் கொள்ளத்தக்க கருத்து என்று உங்களுக்குத் தோன்றுவதை ஏற்று நடவுங்கள் என்று கேட்டுக் கொள்கின்றேன். அநேகம் பேருக்கு நான் சொல்வது அதிசயமாக இருக்கலாம். ஆச்சரியமாகவும் இருக்கலாம். கலவரமாகக் கூட தெரியலாம். இறுதி வரை நீங்கள் நம்பி கடைப்பிடித்து வந்தவைகளுக்கு முரணாக நேர்மாறாக இருக்கலாம். எனக்குத் தோன்றிய கருத்தினைக் கூறுகின்றேன். ஏற்க முடிந்தால் ஏற்றுக் கொள்ளுங்கள். இல்லா விட்டால் தள்ளி விடுங்கள்.

பெண்களை அடிமைப்படுத்தும் கொடுமை இம்முறையில் ஒழியவில்லையென்றால் திருமணமே சட்டப்படி குற்றமாக்கப் பட வேண்டும். யோக்கியமான முறையிலே உரிமை இல்லை என்றால் சட்ட விரோதமாக்க வேண்டும். உலகிலே இருக்கிற எல்லா ஜீவராசிகளைப் போலவும் தான் மனிதனுமாகும். மற்ற ஜீவராசிகள் எப்படி நடந்து கொள்கின்றனவோ அதுபோன்று தான் மனிதனும் நடந்து கொள்கின்றான். பொதுவாக ஆண் ஜீவன்கள் உணர்ச்சிக்கு ஆளாகும்போது பெண் ஜீவனைக் கொண்டு திணித்துக் கொள்ளுமே தவிர குட்டிப் போட வேண்டு மென்று கருதுவது கிடையாது. ஜீவராசிகளில் அதிகமான அறிவு என்பதான பகுத்தறிவுடைய மனித ஜீவன் மட்டும்தான் பெண்ணைத் தனக்கு அடிமையாகக் கொண்டிருக்கிறான். மற்ற எந்த ஜீவனும் இதுபோல் பெண் ஜீவனை அடிமையாக்கிக் கொள்வது கிடையாது.

மனிதனுக்கும் கவலை, தொல்லைகளெல்லாம் ஒழிய வேண்டும். கவலையும், தொல்லையுமில்லாமலிருக்கும் போது அறிவில் சிறந்த மனிதன் மட்டும் கவலையும், தொல்லையும் அடைகிறான் என்றால், அதற்குக் காரணமே அவன் அமைத்துக் கொண்ட இந்த வாழ்க்கை முறையேயாகும். குடும்பம், மனைவி, குழந்தை என்று அவன் வாழ்நாள் முழுவதும் இதற்காகவே தொல்லைப்பட வேண்டியவனாகி விடுகின்றான். மிஷினில் கையைக் கொடுப்பது போல முட்டாள்தனத்திலே போய் மாட்டிக் கொள்கிறான். பிறகு தொல்லைக்கு ஆளாகின்றான்.

மனிதன் எந்த ஜீவராசிகளிலும் ஒத்தவனாக இல்லை. ஜீவராசிகளில் சில ஒரு ஆணோடு பெண்ணோடு இருக்கிறது. மற்றவை நேர்ந்தபடி இருக்க வேண்டியதாயிருக்கிறது. ஒரு ஆணோடு பெண்ணோடு இருப்பதும் இருக்கும் வரை தான். ஒன்று பிரிந்தால் மற்றொன்று தானே வேறொன்றைத் தேடிக் கூடிக் கொள்கிறது. அதுபோன்று மிருகத்திலும் சில இருக்கின்றன. அந்த முறையில் மனிதனைப் பார்த்தால் அப்படியில்லை. அவனை எதோடு சேர்ப்பது என்றே புரியவில்லை. ஆனதனால் இயற்கைக்குச் சம்பந்தமில்லாத ஒன்றை இவனாகவே ஏற்பாடு செய்து கொண்டு, அதில் மாட்டிக் கொண்டு எண்ணற்றத் தொல்லைகளுக்கும், துன்பங்களுக்கும் ஆளாகின்றான். இந்தத் தொல்லைகளும், துன்பங்களும் மனிதனுக்கு நீங்க வேண்டுமானால் திருமணத்தையே நிறுத்தி விட வேண்டும். அப்போதுதான் மனிதன் கவலையற்றவனாக இருப்பான்.

தமிழனின் வாழ்வு முறைக்குக் குறள்தான் என்று சொல்வார்கள். நாம் காட்டு மனிதனாக இருந்த வரை குறள் சரி. நாட்டு மனிதனான பின், பெண்களுக்குத் தான் அதில் கற்பு நீதி சொல்லப்பட்டிருக்கிறதே தவிர, ஆண்கள் கற்பு நீதி பற்றி அதில் ஒன்றுமில்லை. குறளைத் தூக்கியெறிய வேண்டியது தான். பெண்கள் முன்னேற்றத்திற்கு ஒரு வார்த்தை கூட அதில் இல்லை. குறளில் மட்டுமல்ல, தமிழ் இலக்கியங்கள் யாவுமே பெண்களை அடிமைப்படுத்தக் கூடியதாகவே இருக்கின்றன என்பதை விளக்கும்போது சின்னத்தம்பி அவர்கள் “அய்யா அவர்கள் மன்னிக்க வேண்டும் குறளில் ஆண்களுக்கும் நீதி சொல்லப் பட்டிருக்கிறது. ‘பிறர் இல் விழையாமை’ என்ற ஓர் அதிகாரமே இருக்கிறது. பிறன் மனைவியை நினைப்பது, தீண்டுவது குற்றமென்று வள்ளுவர் ஆண்களுக்கும் சொல்லியிருக்கின்றார்” எனக் குறிப்பிட்டார்.

பெரியார் அவர்கள்,

“அய்யா சொன்னது ரொம்ப சரி. வள்ளுவன் மற்றவன் திருமணமும் செய்து கொண்டுள்ள பெண்களை நினைப்பது, தீண்டுவது குற்றமென்று சொன்னானே தவிர, திருமணமாகாத பெண்களைத் தீண்டுவது குற்றமென்று சொல்லவில்லையே! பெண்கள் அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு, அதாவது ஆண்களைக் கண்டால் பயந்து

கொண்டும், வெட்கப்பட்டும், படிக்காத மடைச்சியாகவும், பிறர் கண்டால் அருவருப்பு அடையும்படியும் இருக்க வேண்டுமென்று சொன்னானே தவிர, மனைவி கடவுளைத் தொழாவிட்டாலும், கணவனைத் தொழுபவளாக இருக்க வேண்டுமென்று சொன்னானே தவிர, ஆண்கள் தன் மனைவியைத் தொழ வேண்டும். மனைவி சொல்படி கேட்க வேண்டும் என்று சொல்லவில்லையே. அவ்வை பெண்தான். அப்படி இருந்தும், அவளே ‘தையல் சொல் கேளேல்’ 'பெண் சொல்வதைக் கேட்காதே' என்று தான் எழுதி இருக்கிறாள்.

நான் வள்ளுவனைக் குறை கூறுகிறேன் என்று கருத வேண்டாம். அவன் வாழ்ந்த காலம் அப்படிப்பட்டது. மனிதனெல்லாம் காட்டுமிராண்டியாக இருந்த காலம். அப்போதிருந்த நிலைமைக்குத் தக்கபடி அப்போதுள்ள வாழ்க்கை முறைக்கு ஏற்றபடி அவன் எழுதி இருக்கின்றான். இது அவன் குற்றமல்ல. அப்போதிருந்த நிலை அப்படிப்பட்டது. அதுவே இன்றைக்கும் என்பது தான் தவறாகும். மனிதன் 2,000-ஆண்டுகளுக்கு முன் இருந்தது போல் இன்றில்லை.

தனது வசதிக்கும், வாய்ப்பிற்கும், தேவைக்கும் ஏற்ப உணவு, உடை, உறையுள் மற்ற எல்லாவற்றையும் மாற்றிக் கொண்டிருக் கின்றான். இதை மட்டும் மாற்றிக் கொள்ள மாட்டேனென்றால் இதை முட்டாள்தனம் என்று சொல்லாமல் வேறு என்ன சொல்வது? நீங்கள் நன்றாகச் சிந்திக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். மனிதன் எதில் மாறாமல் இருக்கின்றான்? நன்றாகச் சிந்தியுங்கள். உங்களுக்கு ஏதாவது தோன்றினால் எடுத்துச் சொல்லுங்கள். மாற்றிக் கொள்ளக் கூடியதாக இருந்தால் எனது கருத்தை மாற்றிக் கொள்கிறேன்.

மணமக்கள் தங்களின் வாழ்க்கையில் வரவிற்கு மேல் செலவிடக் கூடாது. முட்டாள்தனமாகக் கோயில் - குளங்களுக்குச் செல்லக் கூடாது. கூடுமானவரை குழந்தை பெறுவதை நிறுத்திக் கொள்ள வேண்டும். மிஞ்சினால் ஒன்றிரண்டோடு நிறுத்திக் கொள்வது அவர்களுக்கு மட்டுமல்ல சமுதாயத்திற்கே நன்மையாகும்.

- 02.06.1968 -கோட்டையூர் திருமண விழாஉரை. விடுதலை - 15.06.1968

# 24.பெண்களுக்கு மூளை இல்லைய◌ா?

ஆண் மக்கள் தங்களுடைய பெண் மக்களை அதாவது தாங்கள் மிகுதியும் மரியாதை செலுத்தும் தாய்மார்களா யிருந்தாலும் சரி, அன்பு செலுத்தும் சகோதரியாயிருந்தாலும் சரி, காதலுக்குரித்தான மனைவிகளாயிருந்தாலும் சரி ஒரே படியாக அவர்களைக் கேவலமாகவே எண்ணியும், மதித்தும் வருவது சகஜமாக இருந்து வருகிறது.

நமது நாட்டில் வெகுகாலமாக இம்மாதிரி பெண்களை இழிவாகக் கருதப்படுவதற்கு நமது சாஸ்திரங்களும், பண்டிதப் பெரியோர்களும், முற்றும் துறந்த முனிவர்களென்று சொல்லப் பட்டவர்களும் ஒருவித காரணமுமின்றி பெண்களைக் கேவலமாக வர்ணித்து வந்ததோடு, பாரபட்சமாக ஏட்டிலும் எழுதிவைத் திருக்கின்றனர். இதைப் படிக்கும் மக்கள் சாதாரணமாக தங்கள் பகுத்தறிவைக் கொண்டே ஆராயாமல் தங்கள் பெண்மக்களைக் கேவலமாக நடத்தி வந்ததோடு அவர்களுக்கு எவ்விதத்திலும் சமத்துவம் ஏற்படாதபடி சட்ட திட்டங்களையும் செய்து அதைப் பழக்கத்திலும் கொண்டுவந்து விட்டார்கள்.

இந்தப் பழக்கமானது இந்தியர் ஒவ்வொருவருடைய மனதிலும் ஆழமாகப் பதிந்து விட்டது. சுயமரியாதை இயக்கத்தின் பலனால் மக்கள் சிறிது சிறிதாக உண்மையை உணர்ந்து வருகிறார்கள். இந்த சந்தர்ப்பத்தில் ஆண் பெண் சமத்துவத்தைப் பற்றி மேனாட்டு மனோதத்வ நிபுணர்கள் செய்யும் முடிவையும் நாம் பெரிதும் கவனிக்க வேண்டியது அவசியம்.

ஆடவர்கள் சாதாரணமாகப் பெண்களை 'பேதையர்க' ளென்று அழைப்பதில் எவரும் பின் வாங்குவதில்லை. அடுப்பங் கரையில் சட்டி சுரண்டும் அம்மையர்களைத்தான் இவ்வாறு கூறிவிடுகிறார்களென்றாலோ தற்கால படிப்புப் படித்து ஆண்களைப் போலவே பி.ஏ., எம்.ஏ., பட்டம் பெற்றவர்களையும் கூட "எப்படியிருந்தாலும் பெண்புத்தி பின் புத்தி தானே; பேதமை என்பது மாதர்க்கணிகலன்" என்று அலட்சியமாகக் கூறி விடுகிறார்கள்.

இதைப் போல் பாமர மக்கள் கூறுவதுதான் ஒருபுற மென்றால் படித்த ஆண்களும் இவ்வாறு கூறுவதற்கு கூச்சமடைவதில்லை. அவர்கள் கூறுவதெல்லாம் என்ன? பெண்களுக்கு "மூளையில்லை" என்பதுதான் பொதுவானது. இது மனிதனுடைய பழக்க வாசனையா, அல்லது இயற்கைவாசனையா என்று கூட நாம் சில சமயங்களில் சந்தேகிக்க வேண்டியிருக்கிறது. என்றாலும் இது ஒரு அலட்சிய புத்தியினாலும், தற்பெருமை யினாலும் நாளா வட்டத்தில் நிலைபெற்று விட்ட ஒரு தப்பபிப்பிராயமென்றே கூறவேண்டும்.

இந்தக் காரணத்தினாலேயே அவர்களை அலட்சியம் செய்து சரியான கல்வியை அளிக்காமல் இருந்து விட்டார் களெனக் கூறலாம். பெண்கள் புத்தியில்லா தவர்களென்று பொதுவாகக் கருதப்படுவதால் ஒவ்வொரு ஆடவரும் தங்கள் பெண்டிர்க்கு எல்லா விஷயத்திலுமே தங்களுடைய "புத்திசாலித் தனமான" யோசனைகளைக் கூற முன் வந்து விடுகிறார்கள்.

சமைக்கின்ற வேலை முதற்கொண்டு வீட்டு வேலைகள் சகலமும் சேர்த்துப் பிள்ளை பராமரிப்பு வரையிலுங் கூட விஷயங்கள் தங்களுக்கு எந்த விதத்திலும் அனுபோகமில்லா திருந்துங்கூட தங்களுக்கு அதிகபுத்தியுண்டு என்கின்ற ஒரு தற்பெருமையினால் எதையும் யூகித்து சொல்லக்கூடிய திறமை உண்டென்கின்ற அசட்டுத் தைரியத்தால் தங்கள் யோசனையைப் பெண்களுக்குக் கூற முன் வந்து விடுகிறார்கள்.

இந்த சம்பவமானது எந்தக் குடும்பத்திலும் சகஜமான தென்றாலும் அவர்கள் அப்படிக் கூறும் சந்தர்ப்பங்கள் நேரும் போதெல்லாம் குடும்பத்திற்குள் கொஞ்சம் "முறு முறுப்பு" ஏற்படாமல் போவதில்லை. சாதாரணமாக வீட்டிலுள்ள பெண்டிர் அந்த "நிபுணத்தனமான" யோசனையை எதிர்த்துக் கண்டிக்காமல் விடுவதில்லை. சில சமயம் ஆத்திரம் பொங்கி தாங்கள் எப்பொழுதும் காட்டும் அடக்கத்தையும் கூட மீறி "நீங்கள் பேசுவது இன்னதென்றே புரியாமல் பேசுகிறீர்கள்; உங்கள் வேலையைப் பார்த்துக்கொள்ளுங்கள்" என்று கூடச் சொல்லி விடுவார்கள். ஆடவர் தற்பெருமைக்குச் சிறிது ஆட்டங்கொடுத்தாலும் தனது படிப்பை விடுவதில்லை.

ஏனெனில் தன் பெண்ஜாதியைவிட இல்லை, மற்ற எந்தப் பெண்களையும் விடவே தனக்கு “அதிகமான மூளை” இருப்பதாகவே அவரது எண்ணம். அதோடு அதை நிரூபித்து காட்டக்கூட முடியுமென்று கூறுவார்கள். அதற்கு உதாரணங் களின் மேல் உதாரணம் எடுத்துக்காட்டுவார்கள். எது எப்படி யிருந்தாலும்,

இவர்கள் இம்மாதிரியாக தம் பெண் ஜாதிகளுக்கு குடும்ப விஷயத்தைப்பற்றி யோசனை கூறப்போகும் போதெல்லாம் “முறுமுறுப்பு” ஏற்படுவதற்குக் காரணந்தான் என்ன வென்று யோசித்தாலோ இவர் கூறும் 10 யோசனைகளில் 9 யோசனைகள் சரியாகயிருப்பதில்லை. ஆனால் இவர் யோசனை சரியென்று இவர் நிரூபிப்பதற்கு பேசுகின்ற பேச்சோ ஊரை வளைக்கும்; ஆடுகின்ற ஆட்டமோ சொல்ல முடியாது. மற்ற உப அங்கங் களுக்கும் குறைவிருக்காது. இருந்தும் என்ன பயன். சில சமயம் இவர் கூறப்புறப்படும் யோசனைகள் யாவுமே பிசகாய்ப்போய் விடுவதுண்டு.

ஆனால் அவர்கள் சச்சரவு எப்படியிருந்தாலும் இருந்து போகட்டும், மனோதத்வ நிபுணர்கள் இது விஷயமாக என்ன கூறுகிறார்களென்றாலோ பெண்டிர்க்கும் “சரியான மூளை உண்டு” என்கிறார்கள். இது உத்தேசமென்றோ, கிட்டத்தட்ட என்றோ, வேறு சித்தாந்தமென்றோ சொல்லி விட முடியாது. அவர்கள் நேரடியாகச் சோதித்துப் பார்த்து ஆராய்ந்தறிந்து கண்டறிந்த முடிவுண்மைகளாகும்.

அமெரிக்காவிலே ஒரு கல்லூரியிலுள்ள 115 ஆண்களையும், 111 பெண்களையும் எடுத்துக்கொண்டு அவர்களுடைய புத்தித்திறமையைப்பற்றி வெகு கவனமாக சோதனை செய்து பார்த்ததில் சராசரியாக பெண்களுக்கும் சரி, ஆண்களுக்கும் சரி, சமத்துவமாக 142 மார்க்குகள் கொடுத்தார்களாம். அதை விடுத்து பல பிரபல்யமான கல்லூரிகளிலுள்ள எல்லோரையும் ஒன்று சேர்த்து மொத்தம் 3175 ஆண்களையும், 1575 பெண்களையும் சோதித்துப்பார்த்ததில் அவர்களுடைய கல்வித் திறமையானது “ஏ” கிரேடு, “பி” கிரேடு முதலிய இரண்டுமே சேர்த்து ஆண்களுக்கு 100க்கு 75.4 மார்க்குகள் என்றும், பெண்களுக்கு 100க்கு 75.2 மார்க்குகள் என்றும் முடிவிற்கு வந்தார்களாம்.

அமெரிக்காவில் ஹேர்வார்டு பல்கலைக்கழகமானது சற்று

மேல் தரமான கல்லூரி. இதனுடைய மாணவர்களையும், உயர்தாராட்கிளிப் பெண் கல்லூரியிலுள்ள மாணவிகளையும் சோதித்து சில மாதங்கள் அவர்களுடைய அறிவுத்திறமையை ஆராய்ந்து பார்த்ததில் ஒரு மாணவனும், ஒரு மாணவியும் மாத்திரம் முதல் தரமானவர்களென்று தேர்ந்தெடுக்கப்பெற்று அவர்களுக்கு 86ரூ மார்க்குகள் நிர்ணயிக்கப்பட்டது.

ஒரு ஹார்வார்டு மாணவர் எல்லோரையும் விட நிரம்பத் தாழ்ந்ததான 8ரூ மார்க்கு வாங்கினதைப்பற்றி யாவரும் ஆச்சரியப்பட நேர்ந்தது. ஆனால் வெகு குறைந்த மார்க்குகள் வாங்கின பெண்மணிகள் மாத்திரம் 28ரூ மார்க்குக்கு குறையாமல் வாங்கி யிருந்தார்கள். பொதுவாக எல்லோரையும் சேர்த்து சராசரி பார்த்தபொழுது மாணவர்களுக்கு 100க்கு 50.5 ஆகவும், மாணவிகளுக்கு சராசரி 100 க்கு 55 ஆகவும் நிர்ணயிக்கப்பட்டது.

இதில் பெண்களுக்கும் ஆண்களுக்கு மிடையே அறிவு, திறமை இவைகளில் அதிகமான வித்தியாசங்கள் இருக்கவில்லை என்பது திட்டமாகத் தெரிகிறது. மற்றும் அவரவர்களுக்கு இட்ட வேலைகளில் சிறிதும் ஏற்றத்தாழ்வு கூற முடியாதபடி திறமையாகவே நடத்தக்கூடிய ஆற்றல் உண்டென்று தெரிகிறது.

இப்பொழுது நாம் சாதாரணமாக உலகத்திலேயே உள்ள ஆண், பெண்களையும் எடுத்துக்கொண்டோமானாலும், திறமை சாலிகளான பெண்கள் சராசரியில் சமத்துவமாகவே தோன்றி யிருப்பதாகக் கண்டு கொள்ளலாம். ஆண்களுக்குப் பிறகு எவ்வளவோ காலத்திற்குப் பின்னால் பெண்கள் தங்கள் சுதந்திரங்களைப் பெற்றிருந்தாலும் இந்தக் குறுகிய காலத்திற்குள் நல்ல புகழ்பெற்ற ஆசிரியைகளும், நடிகர்களும், பிரசங்கிகளும், வர்த்தகம் முதலான துறைகளில் தேர்ச்சி பெற்றவர்களும், எண்ணிக்கையில் கூடுமான வரையில் வீதாச்சாரத்திற்குக் குறையா தென்பது திண்ணம், இந்தியாவின் பெண்கள் சுதந்திரமோ வெகுகாலமாகத் தடுக்கப்பட்டிருந்தும் அவர்களிலும் புகழ் பெற்றவர்களும், அறிவிலும், ஆற்றலிலும், ஆண்களோடு சமத்துவமாக வைத்துப் போற்றக்கூடிய இயல் புடையவர்கள் எத்தனையோ பேர் இந்த குறுகிய காலத்திற்குள் தோன்றி யிருக்கிறார்களென்பதையும் கண்டு கொள்ளலாம்.

இதனால் ஆண்களுக்கும், பெண்களுக்கும் உள்ள சமத்துவ மானது ஒரே தன்மையிலென்பதாக தவறுதலாகக் கொள்ளக் கூடாது. அவர்கள் ஆண்களுக்குச் சமத்துவமான துணைவர்களே ஒழிய, அதாவது தன்மையில் வேறுபட்டாலும் ஒவ்வொருவருக்கு முள்ள திறமையில் அவரவர்கள் சமத்துவமென்று சொல்ல வேண்டியிருக்கிறதே ஒழிய ஆண்களைப் போன்ற நகல்கள் என்று கூறுவதல்ல.

இருபாலார்களுக்கிடையே அவசியமான வித்தியாசங்கள் உண்டு. அவர்களுடைய மனோபாவத்தில் தெளிவாக வித்தியாசப் படுகிறார்களென்பதாக புரொபசர் எட்வர்ட்டி தான்டைட் என்ற மனோ தத்துவ சாஸ்திரி கூறுகிறார். பெண்களானவர்கள் பாஷா வித்வத்திலும், சடுதியான ஞாபக சக்தியிலும், கிரகிக்கும் தன்மையையுடையவர்களென்றும், ஆண்களோ சரித்திர ஆராய்ச்சியிலும், உள் உணர்ச்சியிலும், திரேக பலத்திலும், ரசாயன சாஸ்திரங்களிலும் பெருமையாய் இருப்பதோடு நுணுக்கமான வேலைகளிலும் திறமைசாலிகள் என்றும் கூறுகிறார்.

ஒவ்வொரு பாலாருக்கும் இம்மாதிரியான, இயல்பான குணா குணங்கள் தனித்தனியாக இருக்கிறதென்பதை உணராமல் ஆண்களுக்குள்ள அறிவுத்திறமையில் பெண்கள் குறைவான வர்கள் என்ற முடிவுக்கு வருவதானது ஒரு பெரிய தவறு; ஒரு பிரபல விஞ்ஞான சாஸ்திரியானவர் விஞ்ஞான ஆராய்ச்சியைப் பற்றி வியாசம் தயாரிக்கும்போதெல்லாம் அடிக்கடி தன் பக்கத்திலுள்ள 13 வயதுடைய மகளை தனக்குச் சந்தேகமாய் இருக்கும் ஒவ்வொரு வார்த்தைக்கும் எழுத்துக் கூட்டுதலைக் கேட்டுக் கொண்டு எழுதுவாராம். இந்தப் பெண் சாதாரணமாகப் பள்ளி மாணவியாயிருந்தும் விஞ்ஞான கலை சம்பந்தமான வார்த்தைகளைக் கூட பிழையில்லாமலும் தயக்கமின்றியும் எழுத்துக் கூட்டிச் சொல்லும் வழக்கமுண்டாம். அப்படிச் சொல்லும் பொழு தெல்லாம் அந்தப் பெண் குழந்தையானது தனக்கு இருக்கும் ஞாபகசக்தி கூட தந்தையாருக்கு இல்லா திருப்பதைப் பற்றி பெரிதும் வியப்புறுவாளாம்.

ஒவ்வொரு குடும்பத்திலும், வீட்டு ஆண்களுக்கு பாட்டனார் திதி எப்பொழுது, அமாவாசை எப்பொழுது, தான் ஊர் போய் வந்தது எப்பொழுது என்பதான வெகு சாதாரணமான விஷயங்களைக் கூட எந்தத் தேதியிலென்பது கூட ஆண் மக்களுக்கு ஞாபகம் வருவதில்லை. குடும்பத்தில் நடந்த எந்த சந்தர்ப்பங்களைப் பற்றியும் சரியானபடி எந்த

தேதியில் நடந்தது என்று சொல்லவும் முடியாது. தன்னுடைய பவுண்டன் பேனாவை எங்காவது வைத்து விட்டு வீடெல்லாம் தேடித் திரிவார்கள். ஆனால் வீட்டிலுள்ள பெண்களோ எதுவாயிருந்தாலும் மறக்காமல் ஞாபகத்தோடு சொல்வதும், எடுத்துக் கொடுப்பதும், ஞாபகமூட்டுவதும் வெகு சகஜமான தென்பது யாவருக்கும் தெரிந்த விஷயம்.

மேனாட்டிலோ தற்சமயம் பெரும்பாலான பெண்கள் தங்கள் பாஷா ஞானத்தின் திறமையை யாவருக்கும் திடுக்கிடும் படியான விதத்தில் பிரத்தியட்சத்தில் காட்டி வருகின்றார்கள். முற்காலத்தில் எப்படி இருந்தது என்பதை இப்பொழுதும் நாம் கவனிக்க விட்டு விட்டே பார்த்தாலும் 100க்கு 30 பேர்கள் வரையில் உலகத்தில் புகழ் பெற்ற பேராசியர்களாய் இருப்பவர்கள் பெண்களென்றே சொல்ல வேண்டும்.

இங்கிலாந்தில் நூல் வல்லார்களெல்லாம் பெண்மணிகளே. பிரான்சில் எத்தனையோ நூலாசிரியர்களும் நடிக நாடகத்தில் பேர்போனவர்களும், அரசியல் நிபுணர்களும் பெண்களாக இருந்திருக்கின்றனர். இத்தாலியி லிருந்தும், ஜர்மனியிலிருந்தும் எவ்வளவோ சங்கீத சாகித்யத்தில் பேர் போனவர்களெல்லாம் தோன்றியிருக்கின்றனர்.

அமெரிக்காவில் எவ்வளவோ சமூக சீர்திருத்தத்தில் புகழ் பெற்ற பெண்களைக் காணலாம். இன்னும் அநேக தொழில் களிலும் ஈடுபட்டு இருக்கின்றார்களெனினும் சமூக சீர்திருத்தத்தில் முனைந்து நிற்பவர்கள் பெண்கள் தான் அதிகமெனலாம். வர வர அமெரிக்கப் பெண்கள் அரசியல் விஷயத்திலும் புகுந்து யாவருடைய போற்றுதலையும் பெற்று வருகின்றனர். சமீப காலத்திற்கு முன் தான் விஞ்ஞான சாஸ்திர வழிகளிலும் தங்களுக்குத் திறமையுண்டென்று பெண்கள் அறியத் தொடங்கினார்கள். சென்ற ஜனக் கணிதத்திலிருந்து விஞ்ஞான ரசாயன சாஸ்திர ஆராய்ச்சியிலும் முனைந்து நிற்கும் பெண்கள் 10 வருடங்களுக் குள்ளாக இரட்டிப்பாக அதிகரித்திருக் கின்றார்களென்று தெரிகிறது.

இப்பொழுது அமெரிக்காவிலோ 10 வருடங்களுக்கு முன் 400 பேர் இருந்த விடத்தில் இப்பொழுது 3000 பெண்கள் பிளான் வரைவதில் திறமைசாலிகளாகவும், பெண் கல்லூரித் தலைவி களாகவும் பேராசிரியர்களில் 10000க்கு மேற்பட்டவர் களும், 2000 ஜட்சுகளும்,

லாயர்களில் சுமார் 5000 வரையிலும் பெண்கள் இருப்பதாகவும் தெரிகிறது. பாங்கு உத்தியோகத்தில் முக்கிய ஸ்தானங்கள் வகித்து வருபவர்கள் மாத்திரம் 4000க்கு மேற்பட்ட வர்களென்று தெரிகிறது. பெண்கள் டாக்டர்களாகவும், நர்சு களாகவும், பாதிரிமார்களாகவும் எத்தனையோ 1000 பேர்கள் இருப்பதாகவும் தெரிகிறது.

இவற்றை யெல்லாம் கொண்டு நாம் என்ன முடிவிற்கு வர முடிகிறதென்றால் அவர்களுக்கு எந்த விஷயங்களிலும் ஆண்களைப் போன்ற திறமை உண்டென்றும், ஆனால் அவர்களுக்கு முன்னிருந்த சந்தர்ப்பங்கள் அவர்களுக்கு அவர்களுடைய திறமையைக் காட்ட ஒட்டாதபடி செய்ததே ஒழிய அவர்களுக்குச் சந்தர்ப்பம் கொடுக்கப் பட்டால் அவர்களுடைய போக்கில் நல்ல திறமையைக் காட்டக் கூடுமென்பதாகவே நாம் கருத வேண்டி இருக்கிறது.

ஒரு காலத்தில் ஆண்களுடைய மூளையை விட பெண் களுடைய மூளை அளவில் சிறியதாக இருந்திருப்பதால் புத்தியில் பெண்கள் குறைந்தவர்கள் என்று கருதப்பட்டது. ஆனால், உடற்கூறு சாஸ்திரிகளும் மனோதத்துவ சாஸ்திரிகளும் மூளையினுடைய அளவில் உள்ள வித்தியாசத்தைக் கொண்டு புத்தியை நிர்ணயிக்க முடியாதென்றும், பெரிய மூளைகளை விட சிறிய மூளைகளிலே தான் அதிலும் பெண்களுடைய மூளை களிலே அதிகமான பிரைன் செல்கள் இருப்பதாகவும், செல்களுடைய எண்ணிக்கைக்கு தகுந்த விதத்திலே தான் புத்தியின் அளவும் இருக்கிறதென்றும், ஆதலால் சாதாரணமாகப் பெண்களும், ஆண்களும் சமத்துவமான அறிவு பலம் உடையவர் களென்று முடிவு கட்டி இருக்கின்றனர்.

ஆனால், ஆண்கள் எப்பொழுதும் தங்கள் மனைவிக்கு “மூளை இல்லை” யென்று அடிக்கடி ஏன் சொல்லுகிறார் களென்று யோசித்துப் பார்க்குமிடத்தில் ஆண்களுக்கும், பெண்களுக்கும் மனப்போக்கும், குணப்போக்கும், உணர்ச்சிப் போக்கும் வித்தியாசப்பட்டு இருப்பதினாலேயே யென்பதை கவனிக்க வேண்டியது. இவற்றை அளவிடுவதற்கு நிபுணர் களாலேயே பெரிதும் கஷ்டமாயிருக்கிறது. அவர்களுக்கு உணர்ச்சியும், உற்சாகமும் புத்திப் போக்கு, மதாபிமானம், இரக்கம், பொறுமை, கூச்சம், நாணம் முதலியவைகளான குணங்கள் அதிகமாயிருந்து வருகின்றன. ஆண்களோ, சுயேச்சையிலும்,

தீவிரத்திலும் உள் உணர்ச்சியிலும், கேலிகளிலும் அதிகமான போக்குடையவர்களாய் இருந்து வருகிறார்கள். இந்த அளவு கூட சராசரி என்று தான் கொள்ள வேண்டி இருக்கிறதே ஒழிய தனித்தனியாகவும் கூற முடியவில்லை.

ஏனெனில் சில ஆண்கள் குழந்தைகளிடத்தில் பெண்களை விட அதிகமான ஆர்வத்தைக் காண்பிக்கின்றனர். சில பெண்கள் ஆண்களைப் போல திடமும், தீவிரமுள்ளவர்களாகவுமிருக் கிறார்கள். பெண்களானவர்கள் ஒரு ஆசாமியினுடைய தோற்றத்தைக் கொண்டே நிர்ணயிக்க முற்படுகிறார்கள். ஆனால் ஆண்கள் உண்மை நிகழ்ச்சிகளைக்கொண்டே தங்கள் அபிப்பிராயங்களை ஏற்படுத்திக் கொள்ளுகிறார்கள். ஆண்களானவர்கள் ஒருவர் செய்த காரியத்தைக் கொண்டே அவர்களை மதிக்கின்றார்களே ஒழிய அவர்களுடைய குணாகுணங்களைக் கொண்டோ, அந்தரங்க நடவடிக்கைகளைப் பற்றியோ கவலைப்படுவ தில்லை.

மனித ஸ்பாவத்தை சம்பந்தப்பட்டு எந்த விஷயங்களையும் பெண்களுக்கு யூகித்து உணர்வதற்கான நுட்ப அறிவானது ஆண்களை விட அதிகமாகவே இருக்கிறது. இதற்கு உதாரணமாக, ஒரு ஆணானவன் எவ்வளவுதான் தன் மனைவியோடு பழகி இருந்தாலும் அவளுடைய குணா குணங்களை சரிவர அறிந்து கொள்வதற்கு சக்தியில்லாமலிருக்க, ஒரு மனைவி தான் பழகிய புருஷனின் குணா குணத்தை சிறு காலத்திற்குள் அவனைப் பற்றி அவனே உணர்ந்திருப்பதைவிட அதிகமாக உணர்ந்திருக்கிறாள்.

எவ்வளவு காரணங்கள் இதைப்போல் சொன்னாலும் ஆண்களுக்கு மாத்திரம் பழக்க வாசனையால் ஏற்பட்ட ஒரு அபிப்பிராயமானது திருந்துவதற்கு வெகு நாட்கள் பிடிக்கும் போல் தோன்றுகிறது. இருந்தாலும் இதற்கு முக்கியமான காரணம் குடும்பத்தில் சச்சரவு ஏற்படாமல் சமாதானம் நிலவ வேண்டு மென்று பெண்கள் நினைத்துத் தங்கள் ஆண்மக்களுக்கு அடிக்கடி எந்த விஷயத்திலும் விட்டுக் கொடுத்து விடுவதினா லேயே பெண்களைப்பற்றி சர்வ சாதாரணமாக சமத்துவ மில்லாதவர்களென்று எண்ணம் தோன்றுவதற்கு இடமா யிருக்கிறது. மேலும், அவர்கள் சுதந்திரத்தோடு தங்களுடைய சுய சம்பாத்திய முயற்சியினால் வாழ்ந்து காட்ட வேண்டுவதும் அவசியமாயிருக்கிறது.

பெண்கள் தங்கள் ஜீவனத்திற்கு ஆண்களை எப்பொழுதும் எதிர்பார்த்து நிற்பதானது அவர்களை ஆண்களுக்கு சமத்துவ மானவர்களாய்ச் செய்ய முடியாமலிருக்கிறது. பெண்கள் அறிவுத்திறமையில் சமத்துவமானவர்களாயினும் புத்திப் போக்கில் மாத்திரம் மாறுபட்டவர்களாய் இருக்கிறார்களா தலால் அவர்கள் இருவரும் சமத்துவமானவர்களென்பதோடு இவர்கள் இருவருடைய குணாகுணங்களும் ஒத்து நின்று ஒரு காரியம் நடத்துவதாலேயே வாழ்க்கையும் இன்பமும் ஏற்பட முடியுமென்பதையும் திண்ணமாய் உணர வேண்டும்.

பகுத்தறிவு (மா.இ.) - ஜூன் 1936

## 25.ஒழுக்கமும், கட்டுப்பாடும் இயற்கைக்கு விரோதமானவை

மனித சமூகத்திற்கென்று பொதுவாக சில கட்டுப்பாடு களும் ஒழுங்கும் வாழ்க்கைக்கு ஏற்பட்டிருக்க வேண்டும் என்பதை நாம் அடியோடு ஆட்சேபிக்க வரவில்லை. ஆனால் அவை தனிப்பட்டவர்கள் அதாவது ஆண்டான் அடிமை முறை, எஜமான் கூலி முறை, முதலாளி காரியஸ்தர் முறை, சிநேகிதர்கள் முறை, கூட்டாளிகள் முறை, வாழ்க்கைத் துணைகள் முறை போன்ற தன்மைகள் கொண்ட அதாவது தனிப்பட்ட சம்மந்தங்க ளுக்கு ஏற்படுத்தப்பட்டிருப்பது போன்றதான ஒழுங்கு கட்டுப் பாடுகள் போல பொது வாழ்விற்கு பொதுக் கொள்கைகளாகி யிருக்கக் கூடாது என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

பொது வாழ்க்கைக்கு ஏற்படுத்தப்படும் கொள்கைகள் என்பன பொது ஜனங்களில் யாருடைய தனி சுதந்திரத்துக்கும் பாதக மேற்பட்ட தாகவும் அதுவும் பிரயோகத்தில் சிறிதும் பாரபக்ஷம் உயர்வு தாழ்வு தத்துவம் கொண்ட தல்லாததாகவும் இருக்கவேண்டு மென்பதோடு எல்லாவற்றையும் விட அவை முக்கியமாக இயற்கையோடியைந்ததாகவு மிருக்க வேண்டும். அப்படிப்பட்டவைகளும் மற்றவர்களுடைய நியாயமான உரிமைக்கும், சுதந்திரத்திற்கும் சிறிதும் பாதக முண்டுபண்ணாத தாகவுமிருக்க வேண்டும். (நியாயமான என்றதினாலேயே எது நியாயம்? என்பதற்காக "தர்மசாஸ்திரங்களை"த் தேட வேண்டும் என்பது கருத்தல்ல.

மற்றெப்படி கண்டு பிடிப்ப தென்றால் ஒருவன் தனக்கு நியாயம் என்று சொல்லப் படுவதானது பிறத்தியானும் அதையே தனக்கும் நியாயமென்று சொன்னால் அவன் முதலில் சொன்னவன் ஒப்புக்கொள்ளுகின்றானா என்று பார்த்து நிர்ணயிப்பதே யாகும். அதாவது இருவருக்கும் ஒன்று போன்றது) அன்றியும் அறிவுக்கும் சாத்தியத்திற்கும், அநுபவத் திற்கும் ஏற்றதாகவும் அவசியம் கொண்டதாகவும் இருக்க வேண்டும்.

இப்படிக்கெல்லாம் இல்லாமல் வெறும் நிர்ப்பந்தத்திற்கு

நாணய மற்றதும் அறிவுக்கும் அநுபவத்திற்கும் ஒவ்வாததானது மான விஷயங்களுக்காக வலுத்தவர்கள் தந்திரக்காரர்கள் தங்களுக்குத் தோன்றினபடிக் கெல்லாம் கட்டுப்பாடுகள் செய்து கொண்டு போவதானது எவ்விதப் பயனையும் தராததோடு மனித சமூகத்திற்கு வீண் கஷ்டத்தை உண்டாக்கி வருவதோடு, அது வெறும் அடிமைத் தனத்தையும், அறிவுத் தடையையும் தான் உண்டாக்கும்.

சாதாரணமாக பொது வாழ்க்கையில் ஒருவன் செய்யக் கூடாதென் பதாக ஏற்பாடு செய்திருக்கும் திருட்டு என்பதான ஒரு குணத்தை எடுத்துக் கொள்ளுவோம். அது இன்றைய வழக்கில் ஒரு மனிதனுக்கு அதாவது திருட்டு கொடுத்தவனுக்கு கஷ்டத்தையும் மனவருத்தத்தையும் கொடுக்கக் கூடியதாயிருக்கின்றது என்பதை நாம் ஒப்புக் கொள்ளுகின்றோம். ஏனெனில் நம்ம சொத்தை ஒருவன் திருடினால் நமக்கும் அப்படித்தான் இருக்கும். ஆனால் எதனால் அந்த நஷ்டமும், சங்கடமும் ஏற்படுகின்ற தென்று பார்ப்போமானால் திருட்டுக் கொடுத்தவன் திருட்டுப் போன சொத்தை தன்னுடையது என்றும் அது தனக்கே சொந்தம் என்றும் எண்ணியிருப்பதால்தான்.

உலகில் பொருளியல் சமத்துவம் ஏற்படுகின்றவரை திருட்டு என்னும் குணமானது குற்றமாகத்தான் பாவிக்கப்படும். உலகத் திலுள்ள எல்லாச் சொத்தும் உலகத்திலுள்ள எல்லோருக்கும் சொந்தம். ஒவ்வொருவனும் பாடுபட்டுத் தான் சாப்பிட வேண்டும். தேவைக்கு மேல் எவனும் வைத்துக் கொள்ளக் கூடாது என்பன முதலிய கொள்கைகள் ஏற்பட்டு விட்டால் திருட்டுப் போவதும் திருட்டுப் போனதைப் பற்றிக் கவலைப்படுவதும் தானாகவே மறைந்துவிடும்.

ஆனால் இப்போதும் “நான் திருடுவது குற்றமல்ல. நீ திருடுவது தான் குற்றம். நான் பொய் சொல்வது குற்றமல்ல. நீ சொல்வது தான் குற்றம். நான் விபசாரம் செய்வது குற்றமல்ல. நீ செய்வதுதான் குற்றம்” என்பது போன்றதான பொது ஒழுக்கங்கள் என்பவைகளும் பொதுக் கட்டுப்பாடுகள் என்பவைகளும் ஒரு நாளும் பொது வாழ்வுக்கும், சமத்துவத் திற்கும், சுதந்திரத்திற்கும் சிறிதும் பயன்படாது. இன்று உலகத்தில் சிறப்பாக நமது நாட்டில் இருந்து வரும் ஒழுக்கம், கட்டுப்பாடு, தர்மம் முதலியவைகள் எல்லாம் பெரிதும் இயற்கைக்கு எதிராகவும் அடிமைத்தனத்திற்கு ஆதரவாகவும், தனிப்பட்டவர்கள் சுயநலத்திற்கேற்ற சூட்சியாகவும் செய்யப்

பட்டவைகளாகவேயிருக்கின்றன.

கடைசியாக மனிதனின் ஜீவசுபாவம் என்னவென்றால் உணர்ச்சியும் இந்திரிய செயலும் ஆசையுமேயாகும். உணர்ச்சியின் காரணமாய் பசி, நித்திரை புணர்ச்சி மூன்றும் முக்கியமான இன்றியமையாத இயற்கை அனுபவமாய்க் காண்கின்றோம். இந்திரியங்களின் காரணமாய்ப் பஞ்சேந்திரியங்களும் அதாவது சரீரம், வாய், கண், மூக்கு, காது ஆகியவைகளின் செயல்களையும் முக்கியமான இன்றியமையாத இயற்கை அனுபவமாய்க் காண்கின்றோம்.

ஆகவே பொது உணர்ச்சியும் இந்திரிய செயலும் மனிதனுக்கு ஆசையை உண்டாக்கிக் கொண்டேயிருக்கின்றது. ஆசையின் காரணமாய் எதையும் ஆசைப்படுவதும் அதுவும் அனேகமாய் அளவுக்கடங்காமல் மேலும் மேலும் போய்க் கொண்டிருப்பதும் சுபாவமாகவே இருக்கின்றதைப் பார்க்கின்றோம்.

ஆகவே, உணர்ச்சியும் இந்திரிய செயலும் ஆசையும் மனிதனால் சாமான்யத்தில் கட்டுப்படுத்தக் கூடியதல்ல. யாராலாவது கட்டுப்படுத்தப்பட்டுவிட்டது என்றால் அப்படிப்பட்டவரைப் பற்றி நாம் இங்கு பேச வரவில்லை. நாம் சொல்லுவதும் அவருக்குச் சம்பந்தப்பட்டதல்ல. ( அவர்கள் பல லட்சத்திற்கு ஒருவர் இருப்பார்களோ என்னமோ) அந்தப் படிக்கில்லாத சாதாரண மனித ஜீவனின் உணர்ச்சியையும் இந்திரிய செயலையும் ஆசையையும் கட்டுப்படுத்தும் படியான தாகக் கொள்கைகளை ஒழுக்கங்களை கட்டுப்பாடுகளை ஏற்படுத்தினால் அது செலாவாணியாகுமா? செலாவாணியாவதா யிருந்தாலும் அதற்கு என்ன அவசியம் என்பன போன்றவை களைக் கவனிக்க வேண்டாமா வென்று தான் கேட்கின்றோம்.

பொய் சொல்லக் கூடாது என்று வாயால் சொல்லி விடுகின்றோம். பொய் சொல்லுவதையும் ஒழுக்கக்குறை வென்று சொல்லி விடுகின்றோம். ஆனால் தொழில் முறைமைக்காகப் பொய்யை அவசியமாக வைத்து அதனால் பிறருக்குக் கஷ்டத்தையும், நஷ்டத்தையும் கொடுத்து வரும் வக்கீல் களையும் வியாபாரிகளையும் மனித சமூகத்தில் எவ்வித இழிவின்றி ஏற்றுக் கொண்டிருக்கின்றோம். அத்தொழிலில் சம்பாதித்த செல்வத்தைக் கொண்டு பெருமையைக்

கொண்டு அம் மக்களை கௌரவ மாகவும் மதிக்கின்றோம். ஆனால் அது போலவே நடக்கும் மற்றொரு தொழில்காரரை உதாரணமாக தேவதாசிகள் போன்றார்களை இழிவாகக் கருதுகின்றோம்.

பொதுவாக இம் 3 பேர்களாலும் மனித சமூகங்களுக்குக் கெடுதியும் நஷ்டமும் இருந்தும் இருவரை ஏற்றுக் கொண்டு ஒருவரைத் தள்ளுவதானது கேவலமும் சூட்சியும் சுயநலமுமே யல்லாமல் இதில் நியாயமிருப்பதாகச் சொல்லமுடியுமாவென்று கேட்கின்றோம். எந்தத் தொழிலானாலும் மற்றவர்களுக்குக் கெடுதியைக் கொடுக்கும் தொழில் எதுவானாலும் அது இல்லாமலே உலகம் நடக்கும் படியாகத்தான் பார்க்க வேண்டும். இப்படிப் பட்ட விஷயத்தில் மாத்திரம் வேண்டுமானால் இயற்கையை மாற்றி கட்டுப்பாடுகளை ஏற்படுத்துவது அவசியமாகலாம். அப்படிக்கில்லாமல் ஒருவருக்கு ஒருவிதம் என்பதாக மாற்றுவது பயன்படாததாகவே முடியும்.

எனவே இப்போது நடைமுறையிலிருக்கும் விபசார மென்பதும் அதன் தத்துவமும் பெண்களை அடிமைப்படுத்து வதற்காக பெண்கள் அடிமைகள் என்னும் கருத்தின் மீது ஏற்படுத்தப்பட்டவைகள் ஆதலாலும் அது ஆண்களுக்குச் சிறிதும் சம்பந்தமில்லாமலிருப்பதாலும் அது ஒப்புக் கொள்ள முடியாததாய் காணப்படுவதோடு பெண்கள் சுதந்திரம் பெண்கள் விடுதலை என்பவைகளுக்காக நடைபெறும் காரியங்களில் விபசாரம் என்னும் காரியம் வந்து முட்டுக் கட்டை போடுமானால் அதைத் தைரியமாய் எடுத்தெரிந்து விட்டு முன்னோக்கிச் செல்ல வேண்டியது உண்மையான உழைப்பாளிகளின் கடமையாகு மென்பதையும் குறிப்பிட்டு விட்டு இப் போதைக்கு ஒருவாறு முடிக்கின்றோம்.

- குடி அரசு - 26.10.1930